[illegible]



அவர்களும் (அந்ததேவதைகளும்) துக்கிகளா யிருந்தால் அந்
நியர்களா லுபாசிக்கப்படுவதும் அப்படி உபாசிக்கிறவர்களுக்கு
சுகபலனைக் கொடுப்பதும் எப்படியென்ருலோ, இவ்வுலகத்தில்
இராஜா முதலியவர்கள் தாங்கள் துக்கிகளா யிருந்தாலுங்கூட தங்
களை ஆசிரதம் செய்தவர்களைக் காற்பதுமுதலிய தெப்படியோ
அப்படித்தான. "தேவலோகத்தில் தேவதைகள் ஆநந்தரூபிகளா
யிருக்கிருர்கள்" என்ற சுருதிக்கு தேவதைகள் துக்கம் முழுதும்
அந்தக்கரண தருமமென்பதை யறிந்து ஆத்மாவை எப்போதும்
ஆநந்தரூபியாய் அனுபவித்துக்கொண்டே யிருக்கிருர்களென்பது
தாத்பரியம். தேவதைகளுக்கும் துக்க மிருக்கிறதென்று சொல்
லுகிற "சிருஷ்டிக்கப்பட்டிருக்கிற அந்த தேவதைகள் மகத்தான
இந்த (சம்சார) சமுத்திரத்தில் விழுந்தார்கள்" உன்கிற சுருதிக்கு
தேவதைகளுக்கும் சரீரபரிக்கிரகத்தினுல் துக்கமிருக்கிறதென்றே
தாத்பரியம். ஆகையால், விதேகமுக்தி (தேக மில்லாததாகிய
மோக்ஷம்) யின் பொருட்டே பிரயத்தினம் செய்யவேண்டியது.
சரீரமில்லாததே முக்தி என்னும் பக்ஷத்தில் சரீரத்துடன் கூடின
வர்களாய் ஆகாசத்தில் நக்ஷத்திர ரூபமாகக்காணப்படுகிற சில
தேவதைகள் முக்தர்களென்று மனிதர்களால் சொல்லப்படுகிருர்
களே அவர்கள் முக்தர்க ளெப்படியென்ருலோ, முக்தியானது
ஸாலோக்கிய ஸாமீப்பிய ஸாரூப்பிய ஸாயுஜ்ஜியம் என நான்கு
விதம். (இந்த முக்தியை யடைவதற்கு) சரியை கிரியை யோகம்
ஞானமென முறையே சாதனங்கள். பகவத் கைங்கரியரூபமான
தாசபாவனை (பகவான் சர்வக்கியன், நான் கிஞ்சிக்ஞன், அவன்
எஜமானன், நான் தாசன், அவனுடைய ஆக்ஞைப்படிக்கு நான்
நடக்கவேண்டியவன், என்கிற எண்ணம்) சரியை. சிவவிஷ்ணு
முதலான (தேவதா) பூஜைசெய்தல்தான் கிரியை. யமம் நியமம்
முதலான அஷடாங்கள்தான் யோகம். ஜீவ பரமாத்துமாக்க
ளுடைய ஐக்கிய சாக்ஷாத்காரம் (பிர்ம்மத்துடன் கலந்து பேதமற்
றிருத்தலையறிதல்) ஞானம். அவைகளில் முந்திய மூன்று முக்தி
கள் புனரா விருத்தியுள்ளவை (மறுபடி பூமியில் ஜனனத்தைக்
கொடுக்கத்தக்கவை] ஆனபடியினுலே முக்கியமானவைக ளல்ல.
புனராவர்த்தி யில்லாததினுலே ஸாயுஜ்ஜியமே முக்கியமானமுக்தி.
யோகத்தினுல் ஸாயுஜ்ஜியம் (கிடைக்கிறது) என்கிற சாஸ்திரமா
னது நிர்குணப் பிர்ம்மயோக விஷயமானதா யிருக்கிறது.

[illegible]



சரீரத்துடன் கூடிய முக்தர்களைப்போல எப்போதும் எவ்வி
டத்திலும் எவனாலேயும் எவ்விதத்திலும் காணப்படாததினாலே
அசரீரமுக்தியானது சூனியமே என்று எண்ணக்கூடாது. அசரீர
முக்தர்களுக்குச் சரீரத்திற்கு சூனியத்துவமே தவிர சுவரூப
சுகத்திற்கு சூனியமில்லை. சுவரூபசுகமோ சரீர மில்லாததினாலே
சுஷுப்தி சுகம்போல் தன் அனுபவத்தினாலேயே அறியத்தகுந்
தது. வேறொன்றினா லறியத் தகுந்ததல்ல. ஸுஷுப்தியானது
முக்திக்குச் சமமானதென்றால், அதுவும் முக்தியாகட்டுமே யென்
றாலோ, அப்படிச் சொல்லக்கூடாது. சுகானுபவமாத்திரத்தில்
சமானமிருந்தாலும் ஸுஷுப்தியில் அக்ஞானமும் மறுபடி விழிப்
பு மிருக்கிறது. முக்தியிலோ அவ்விரண்டுமில்லை யாகையால்,
ஸுஷுப்திக்கு முக்தித்துவமில்லை. பிரளயத்திற்கும் முத்தித்துவ
மில்லை. இப்படி ஸுஷுப்தி சுகம்போல் முக்தி சுகமானது தன்
னுடைய அனுபவத்தினாலேயே அறியவேண்டிய தாகையால் அது
பிரத்தியக்ஷமேயன்றி சூனியமல்ல. ஆனால் சரீரத்துடன் கூடிய
முக்தியைப்போல அசரீர முக்தியும் பிரத்தியக்ஷமானால் அவை
களில் பேதமென்னவென்றாலோ அக்ஞான நிவிருத்தியும் மறு
படி எழுந்திருத்தலில்லாமையும் தான் பேதமென்று அறியவேண்
டியது. அசரீரமுக்திக்குப் பரம சுகத்துவமும் சரீர பரிக்கிரகத்
தினால் துக்கத்துவமும் சுருதி யுக்தி இவைகளினால் சொல்லப்
பட்டது. இப்போது அனுபவத்தினாலுங்கூட அவ்விரண்டையும்
சொல்லுகிறோம். நாள்தோறும் சுஷுப்தியில் சரீரபரிக்கிரக மில்
லாததினாலே துக்கமின்மையும் ஜாக்கிரத் சுவப்நாவஸ்தைகளில்
சரீர பரிக்கிரகத்தினாலே துக்கமும் எல்லாராலும் அனுபவிக்கப்
படுகிறது. எங்கெந்த விடத்தில் சரீர பரிக்கிரகமுண்டோ அங்
கங்கே துக்கமு மிருக்கிறதென்கிற வியாப்தியினாலே (ஒருவித
மான நிச்சயம். எப்படி என்றால், புகையிருந்தால் அக்கினியிருக்
கும் என்பதுபோல) ஆநந்தரூபியான ஆத்மாவுக்குச் சரீரபரிக்கிர
கத்தினாலேயே துக்கம் வருகின்றது. சுவபாவமாயில்லை. அந்தச்
சரீர (பரிக்கிரக) த்திற்குக் காரண மென்னவென்றாலோ பூர்வ
கருமத்துடன்கூடிய பஞ்சீகிருத பூதங்களே. கேவல பஞ்சபூதங்
கள் மாத்திரமல்ல. பஞ்சபூதங்க ளெங்கு மிருக்கிறபடியால் அவை
களினாலேயே சரீர முண்டாகிறதாக சொல்லக்கூடாது.

[illegible]



சுக்கில சோணித சம்பந்தத்தினாலே மாறின பூதங்களே சரீரத்திற்குக் காரணமென்று சொல்லவேண்டியதா யிருக்கிறதேயென்றாலோ வீணாய்ப்போன சுக்கில சோணிதங்களில் சரீர உற்பத்தி காணப்படாததினாலே அவைகளே காரணமென்று சொல்லக்கூடாது. ஆகையினாலே கருமத்துடன்கூடிய பூதங்களே சரீரத்திற்குக் காரணமா யிருக்கின்றன. பஞ்சபூதங்களும் தேசகாலங்களும் எங்கும் ஓரேவிதமா யிருக்கிறபடியினாலே அந்தந்தக் கருமவிசேஷங்களே சரீர விசேஷங்களுக்கு காரணமாயிருக்கின்றன. எப்படியெனில், மண் சாதாரணமாயிருந்தாலும் குயவனுடைய விசித்திர வியாபாரமே குடம்முதலிய விசித்திரமான காரியத்திற்கு ஏதுவாயிருக்கிறது. திருஷ்டாந்தத்தில் குடம் முதலானதிற்கு மண் உபாதானகாரணமும் குயவனுடைய வியாபாரம் நிமித்தகாரணமு மெப்படியோ அப்படியே தார்ஷ்டாந்திகத்திலும் சரீரத்திற்கு பஞ்சீகிருத பூதங்கள் உபாதான காரணம். அதின் கருமங்கள் நிமித்தக்காரணம். ஆகையினாலே, ஜாக்கிர ஸ்வப்நங்களில்போல போகத்தைக் கொடுக்கத்தக்க கருமமிருந்தால் சரீரமிருக்கும். ஸுஷுப்தியில் கரும மில்லாததினாலே சரீரமுமில்லை. பின்னும், மண்ணிருந்தாலும் குயவன் வியாபாரம் இல்லாவிடில் குடம் உற்பத்தியில்லை. அப்படியே ஈசுவரனால் சிருஷ்டியான பஞ்சபூதங்க ளிருந்தாலும் ஆத்மஞானத்தினாலே கருமங்கள் நஷ்டமானபோது அப்படி நஷ்டமான ஞானிக்குச் சரீரமுண்டாகிறதில்லை.

அப்படியானால் கருமசாஸ்திரத்தில் செய்யப்பட்ட சுபாசுப கருமத்தை அவசியம் அனுபவிக்கவேண்டியது என்றும் அனுபவிக்கப்படாமலே அநேக நூறுகோடி கல்பமானாலும் கருமமானது நசிக்கிறதில்லை. என்றும், ஞானசாஸ்திரத்தில் அப்படியே ஞானமாகிற அக்கினியானது சகல கருமங்களையும் சாம்பலாக்கிவிடும் என்றும் சொல்லியிருக்கின்றது. இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று விரோதமா யிருக்கிறதேயென்றாலோ, அதின் நிச்சயமெப்படியென்பது சொல்லப்படுகிறது. சாஸ்திரத்தில் பிரபல வசனம், துர்ப்பல வசனமென விரண்டுண்டு. பிரபல வசனம்தான் சித்தாந்தவசனம். துர்ப்பல வசனம் பூர்வபக்ஷ வசனம். பிரபல வசனமானது துர்ப்பலத்தை நிராகரித்து விடுகிறது.

𑌤𑌦𑍍𑌯𑌥𑌾 𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌪𑌰𑌮𑍋 𑌧𑌰𑍍𑌮 𑌇𑌤𑌿 𑌵𑌚𑌨𑌂 । 𑌪𑍍𑌰𑌬𑌲𑌮𑌪𑌿 𑌤𑌦𑍍𑌯𑌾𑌗𑍇 𑌪𑌶𑌵𑌃 𑌆𑌲𑌬𑍍𑌧𑌵𑍍𑌯 𑌇𑌤𑌿𑌵𑌚𑌨𑍇𑌨𑌾𑌪𑌿 𑌪𑍍𑌰𑌬𑌲𑌂 𑌨𑌿𑌰𑌸𑍍𑌯𑌤𑌿 । 𑌅𑌵𑌶𑍍𑌯𑌮𑌨𑍁𑌭𑍋𑌕𑍍𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿𑌵𑌚𑌨𑌂 𑌤𑌪𑌸𑌾 𑌕𑌲𑍍𑌮𑌷𑌂 𑌹𑌨𑍍𑌤𑍀𑌤𑌿𑌪𑍍𑌰𑌬𑌲𑌵𑌚𑌨𑍇𑌨 𑌦𑍁𑌰𑍍𑌬𑌲𑌂𑌸𑌤𑍍 𑌨𑌿𑌰𑌸𑍍𑌯𑌤𑌿। 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌸𑌞𑍍𑌚𑌿𑌤𑌾𑌨𑌿 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿 𑌬𑌹𑍂𑌨𑌿 𑌸𑌨𑍍𑌤𑍍𑌯𑌪𑌿 𑌆𑌤𑍍𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌤𑌾𑌨𑌿 𑌨𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑍍𑌯𑍇𑌵 । 𑌕𑌰𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑍇 𑌜𑌨𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑌃। 𑌜𑌨𑍍𑌮𑌾𑌭𑌾𑌵𑍇 𑌦𑍁𑌃𑌖𑌾𑌭𑌾𑌵𑌃 𑌦𑍁𑌃𑌖𑌾𑌭𑌾𑌵𑍇 𑌆𑌨𑌨𑍍𑌦𑌾𑌵𑌾𑌪𑍍𑌤𑌿𑌃 । 𑌇𑌤𑍍𑌯𑍇𑌵 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌃.

𑌇𑌤𑌿 𑌚𑌤𑍁𑌰𑍍𑌥𑌵𑌰𑍍𑌣𑌕𑌃 𑌸𑌮𑌾𑌪𑍍𑌤𑌃.

---

𑌪𑌞𑍍𑌚𑌮𑌵𑌰𑍍𑌣𑌕𑌃.

𑍐 𑌅𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌶𑌰𑍀𑌰𑌪𑌰𑌿𑌗𑍍𑌰𑌹𑌾𑌚𑍍𑌚 - 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮𑌣𑍇𑌤𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑌂 - 𑌤𑌤𑍍𑌕𑌰𑍍𑌮 𑌕𑌿𑌂 𑌕𑌤𑌿𑌵𑌿𑌧𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 - 𑌕𑌰𑍍𑌮 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂- 𑌪𑍁𑌣𑍍𑌯𑌂 𑌪𑌾𑌪𑌂 𑌮𑌿𑌶𑍍𑌰𑌞𑍍𑌚𑍇𑌤𑌿 - 𑌦𑍇𑌵𑌾𑌦𑌿𑌶𑌰𑍀𑌰𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 - 𑌤𑌿𑌰𑍍𑌯𑌗𑌾𑌦𑌿𑌶𑌰𑍀𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑌾𑌪𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌂 - 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌦𑌿 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌪𑌮𑌿𑌶𑍍𑌰𑌫𑌲𑌂 - 𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌕𑌰𑍍𑌮 𑌉𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌂 - 𑌮𑌧𑍍𑌯𑌮𑌂𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑍇𑌕𑌂 𑌤𑍍𑌰𑌿𑌵𑌿𑌧𑌂 - 𑌏𑌵𑌮𑍁𑌕𑍍𑌤 𑌕𑌰𑍍𑌮𑌭𑍇𑌦𑍇𑌨 𑌜𑌨𑍍𑌮𑌭𑍇𑌦𑍋𑌽𑌪𑌿 𑌨𑌾𑌨𑌾𑌪𑍍𑌰𑌕𑌾𑌰𑌃 - 𑌤𑌥𑌾𑌹𑌿 - 𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌗𑌰𑍍𑌭𑌾𑌦𑌿𑌶𑌰𑍀𑌰𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑍋𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌂 - 𑌇𑌨𑍍𑌦𑍍𑌰𑌾𑌦𑌿𑌶𑌰𑍀𑌰𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌮𑌧𑍍𑌯𑌮𑌂- 𑌯𑌕𑍍𑌷𑌰𑌾𑌕𑍍𑌷𑌸𑌪𑌿𑌶𑌾𑌚𑌾𑌦𑌿𑌶𑌰𑍀𑌰𑌂 𑌪𑍁𑌣𑍍𑌯𑌸𑌾𑌮𑌾𑌨𑍍𑌯𑌂 - 𑌪𑌰𑌤𑌾𑌪𑌕𑌕𑌣𑍍𑌟𑌕𑌵𑍃𑌕𑍍𑌷 𑌵𑌿𑌷𑌵𑍃𑌕𑍍𑌷 𑌵𑍍𑌯𑌾𑌘𑍍𑌰 𑌸𑌰𑍍𑌪𑌵𑍃𑌶𑍍𑌚𑌿𑌕𑌮𑌶𑌕 𑌉𑌲𑍂𑌕 𑌜𑌲𑍌𑌕𑌾𑌦𑌿 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌸𑌰𑍍𑌵𑌂 𑌪𑌾𑌪𑍋𑌤𑍍𑌕𑍃𑌷𑍍𑌟𑌂।



அதெப்படியென்றால், துன்பம் செய்யாமை உத்தமமான தருமம் என்கிற வசனம் பிரபல வசனமானாலும் அதை யாகத்திலே பசுவதம் செய்யத்தகுந்தது என்கிற அதி பிரபல வசனமானது நிராகரிக்கிறது. இப்படிப்போல அவசிய மனுபவிக்கவேண்டியது, என்கிற வசனம் தபசினால் பாபத்தை நாசம் செய்கிறான் என்கிற பிரபல வசனத்தினால் துர்ப்பலமானதாக தள்ளப்படுகிறது. ஆகையினாலே சஞ்சிதமான கருமங்கள் வெகுவாயிருந்தாலும் ஆத்ம ஞானத்தினாலே அவைகள் நசித்தேபோகிறது. கருமமில்லாவிட்டால் ஜன்மமுமில்லை. ஜன்மமில்லாவிட்டால் துக்கமுமில்லை. துக்கமில்லாவிடில் ஆனந்தமுண்டாகிறது. இதுதான் சித்தாந்தம்.

நான்காவது வருணகம் முற்றிற்று.

---

## ௫ - வது வருணகம்.

இந்த ஆத்மாவுக்குத் துக்கமானது சரீர பரிக்கிரகத்தினாலென்றும் சரீரமானது கருமத்தினாலென்றும் சொல்லப்பட்டது. அந்தக்கரும மெது? அதெத்தனை விதம்?

கருமமானது புண்ணிய பாப மிசிர மென மூன்றுவிதம். தேவாதி சரீரம் புண்ணிய கருமபலன். மிருகாதி சரீரங்களெல்லாம் பாபகருமபலன். மனுஷியாதி சரீரம் புண்ணியபாப மிசிர கருமபலன். (என்றால், இப்படிப்பட்ட கருமபலன்களால் அப்படிப்பட்ட ஜன்மங்களை யடைகிறான் என்பது கருத்து). இப்படிச் சொல்லப்பட்ட மூன்றுவித கருமத்திலும் உத்கிருஷ்டம் (சிரேஷ்டம் அல்லது உத்தமம் அல்லது உயர்ந்தது) மத்தியமம் (நடுத்தரமுள்ளது) சாமான்னியம் (கீழான அல்லது தாழ்ந்தது) என தனித்தனி மூன்றுவிதம். இப்படிச் சொல்லப்பட்ட கரும பேதத்தினாலே நானாவித ஜன்மபேதமுமாகிறது. அதெப்படியென்றால், ஹிரண்ணிய கருப்பாதி சரீரம் புண்ணியோத்கிருஷ்டம். இந்திராதி சரீரம் புண்ணியமத்தியமம். யக்ஷராக்ஷஸ பிசாசுமுதலிய சரீரம் புண்ணிய சாமான்னியம். பிறருக்குத் துன்பத்தை யுண்டாக்கத்தக்க முட்களுள்ள மரங்கள், விஷமுள்ள மரங்கள், புலி, பாம்பு. தேள், கோட்டான், கொசு, அட்டை முதலான சரீரங்களெல்லாம் பாபோத்கிருஷ்டம்.

[illegible]



பிலாமரம், மாமரம், வாழை, தெங்கு முதலான பழம் பத்தி
ரம் புஷ்பம் முதலானவைகளாக உபயோகப்படுகிற விருக்ஷங்க
ளும் கொடிகளும் ஊர்பன்றி, எருமை, கழுதை, ஓட்டை, முதலா
னசரீரங்களும் பாபமத்தியமம். அரசு, துளசி, பசு, குதிரை முத
லிய சரீரம் பாபசாமான்னியம். இந்த மனுஷிய லோகத்தில் நிஷ்
காம கருமானுஷ்டானம், சாதன சதுஷ்டயம், சத்குருவை யடை
தல், சிரவணம், மனனம், ஆத்மஞானம், இப்படிக் கிரமமாக
ஜீவன்முக்திக்கும் விதேக முக்திக்கும் யோக்கியமான மனுஷிய
சரீரம் மிசிர கருமோத்கிருஷ்டம். தன்னுடைய ஆசிரமத்திற்கு
யோக்கியமான கருமங்களுடையவும் காம்மிய கருமங்க ளுடைய
வும் அனுஷ்டான யோக்கியமாகிய மனுஷிய சரீரம் மிசிர கரும
மத்தியமம். சண்டாள, புல்கஸ, கிராத, யவநாதி மனுஷியசரீரம்
மிசிர கருமசாமான்னியம். ஆகையினாலே விவேகியாகிய புரு
ஷன் இந்தக் கருமத்தினுடைய பல தாரதம்மியத்தை விசாரித்து
பூமியில் மனுஷிய ஜன்மத்தில் மிசிர கருமோத்கிருஷ்ட ஜனன
மானது எப்படி சித்திக்குமோ அப்படித் தன்னுடைய வருணா
சிரம கருமங்களை பலத்தி லிச்சையைவிட்டு ஈசுவரார்பணம் செ
ய்து ஆத்மவிசார மூலமாய் மோக்ஷப் பிராப்திக்காகவே பிரயத்
தினம் செய்யவேண்டியவனா யிருக்கிறானென்பது சித்தாந்தம்.
இந்த மூன்றுவித கருமமும் எதினால் செய்யப்படுகிற தென்றா
லோ, மூன்றுவித கரணங்களினாலேயே செய்யப்படுகிற தென்று
அறியவேண்டியது. இவ்வுலகத்தில் "நான் செய்கிறேன் நான்
செய்விக்கிறேன்" என்று சொல்லுகிற எல்லோருடைய அனுபவ
த்தினால் இந்தத் தேகத்தில் தேகாபிமானியா யிருந்துகொண்டு
நான் என்கிற சப்தத்திற்கு அர்த்தமாக எந்த ஆத்மா விருக்கிறா
னோ அந்த ஆத்மாவுக்குக் கருத்திருத்துவத்தைச் சொல்லவேண்
டியதாயிருக்க, அவனைவிட்டு மூன்றுவித கரணங்களுக்கும் கருத்
திருத்துவம் எப்படிச் சொல்லப்படலா மென்றாலோ, ஆத்மா
அவிகாரி நிஷ்கிரியன் சுவகத பேதமில்லாதவன் (அவயவமற்ற
வன்) ஆகையினாலே ஆத்மாவுக்குக் கருத்திருத்துவம் சொல்லக்
கூடாது. ஆனால் கருத்திருத்துவம் ஆத்மா வுடையதுபோல் விள
ங்குகிறதே, கருத்தாவேறே காணவில்லையே யென்றாலோ, ஆத்
மாவிடத்தில் காணப்படுகிற கருத்திருத்துவமானது ஆரோபத்தி
னாலேயேயன்றி சுவபாவமா யில்லையென்று அறிய வேண்டியது.

[illegible]



சுவபாவமென்றே சொல்லலாமென்ருல், “வேதாந்த விசா
ரம் செய்து என்னுடைய கருத்திருத்துவத்தை நிவிருத்தி செ
ய்துகொள்ள வேண்டும். இது போகாவிட்டால் சம்சார பெந்
தம் விடாது” என்று ஒவ்வொருவனும் செய்கிற பிரயத்தினம்
வீணுனதாக முடியும். ஆத்மாவுக்குக் கருத்திருத்துவம் சுவபாவ
மாகவே யிருக்கட்டும். பிரயத்தின விசேஷத்தினுல் நசித்தும்
போகட்டுமே யென்ருல், சுவபாவமென்பது சுவரூபமானதினுலே
சுவரூபம் நசிக்க எவன்தான் பிரயத்தினம் செய்வான். சுவரூப
நாசமானுல் எவன்தான் புருஷார்த்தத்தை யனுபவிப்பான்.
அகருத்தாவாகிற ஜீவன்முக்தியே யில்லையென்ருல், வேதாந்த
சம்பிரதாயமும் குரு சிஷியர்களு மில்லாமல் போகும். பின்னும்
ஆத்மா அகருத்தா சாக்ஷி கிரியை யற்றவன் என்று சொல்லுகிற
சுருதிகளுக்கு ஹானிவரும். சுஷுப்தியில் ஆத்மாயிருந்தும் கருத்
திருத்துவம் காணப்படவில்லை. கருத்திருத்துவம் சுவாபாவிக
மானுல் அக்கினியில் உஷ்ணம்போல (சுஷுப்தியிலும்) காணப்
படும். அப்படிக்காணப்படவில்லை. ஆகைபால், ஆத்மாவுக்குக்
கருத்திருத்துவம் சுவபாவமானதல்ல. தச்சன் முதலியவர்களுக்
குக் கருத்திருத்துவ மிருந்தாலும் ஸ்நானகாலத்திலும் போஜன
காலத்திலும் (உளி வாச்சி முதலிய) ஆயுதங்களாகிய கரணங்க
ளில்லாத்தினுலே கருத்திருத்துவம் காணப்படாததுபோல சுஷுப்
தியில் ஆத்மாவுக்கு இந்திரியாதிகரண வியோக மானதினுல் கருத்
திருத்துவம் காணப்படவில்லையென்று சொல்லுவோமென்ருல்,
அப்படியல்ல. (ஒன்றும் செய்யாமல் மௌமா யிருக்கிறதாகிய)
தூஷ்ணீம் பூதாவஸ்தையில் அந்தக்கரண சேர்க்கையிருந்தும்
கருத்திருத்துவம் காணப்படாததினுலே ஆத்மாவுக்குக் கருத்திரு
த்துவம் சுவாபாவிகமல்ல. மற்றெதுவென்ருலோ, ஆத்தியாஸிக
மே (ஆரோபிதமே).

ஆத்தியாஸிகமென்பது யாது?

ஒன்றினுடைய தருமங்கள் மற்ருென்றினிடத்தில் காணப்படு
தல்தான். எப்படி யென்ருல், ஓடத்தின் ஓட்டம் நதிக்கரையி
லிருக்கிற மரங்களிலேயும் சலிக்காமலிருக்கும் தன்மையையுடைய
மரங்களின் தருமம் ஓடத்திலும் ஆரோபத்தினுல் எப்படி விளங்
குகிறதோ அப்படிப்போல் மூன்றுகரணங்களுடையதாகிய கருத்
திருத்துவம் ஆத்மாவிலும் ஆத்மாவிடத்திலுள்ள அகருத்திருத்து
வம் மூன்றுகரணங்களிலும் விளங்குதல் அக்ஞானத்தினுலேதான்.

[illegible]



ஆகையினாலே ஆத்மாவுக்குக் கருத்திருத்துவம் ஆரோபிதமென்று அறியத்தக்கது.

மூன்றுவித கரணங்களும் அசேதன மானதினாலே அதற்கெப்படி கருத்திருத்துவ முண்டாகும்?

கரணங்களுக்கே கருத்திருத்துவ முண்டென்றால், அவைகளுக்கு வேறே கரணங்கள் வேண்டுமே?

என்னும் பக்ஷத்தில் உலகத்தில் அசேதனமான வாயுவுக்கும் அசேதனமான ஜலத்திற்கும் மரம்முதலியதை வேருடன் பிடுங்குவதிலும் அவைகளை தூரத்தில் கொண்டுபோய்ப் போடுவதிலும் காரணமன்றியிலேயே கருத்திருத்துவம் காணப்படுவதுபோல் மூன்றுவித கரணங்களுக்கும் வேறே கரணங்களன்றியிலேயே கருத்திருத்துவ மிருக்கக்கூடும்.

இந்த மூன்றுவித கரணங்களினாலேயும் செய்யப்படுகிற கருமங்களெவையென்றால், ஸவிசேஷ சிந்தை, நிர்விசேஷ சிந்தை, பரலோகசிந்தை, பக்திஞான வைராக்கியசிந்தை, இவைமுதலிய விகாரங்களெல்லாம் மனதினால் செய்யப்படுகிற மனச் சம்பந்தமான புண்ணிய கருமங்கள், விஷயசிந்தை, அந்நியர்களுக் கபகார சிந்தை, வேதசாஸ்திரங்களில் அப்பிரமாணசிந்தை, தருமாதரும மென்பதில்லை யென்கிறசிந்தை, இவைமுதலிய புத்தி விகாரங்களெலலாம் மனச்சம்பந்தமான பாபகருமங்கள். ஸவிசேஷ சிந்தையையும் நிர்விசேஷ சிந்தையையும் புண்ணிய சிந்தையையும் விஷயசிந்தை முதலான பாபசிந்தையுடன் கலந்து அனுஷ்டானஞ் செய்வது மனச்சம்பந்தமான மிசிர கருமங்கள். வேதாத்தியயனம், சாஸ்திரம்படித்தல், கீதாபடனம், சகஸ்ரநாமபடனம், பஞ்சாக்ஷரம் முதலிய மந்திரஜபம், பகவன்னுமஸங் கீர்த்தனம், பரோபகாரவார்த்தை, சத்தியவாக்கியம், மிருதுபாஷணம், பூர்வபாஷணம் (ஒருவன் பேசினால் நாம் பதில் பேசலாம் நாமாக பேசுவானேனென்றிராமல் முந்திப் பேசுதல்) வாக்கினால் செய்யப்படுகிற வாசிக புண்ணியகருமங்கள். வேதசாஸ்திர தூஷணை, தேவதா தூஷணை, அசத்தியவார்த்தை, கோட்சொல்லுதல், கடும்சொல்லாகிற வாக்கியம், அற்ப அல்லது பரிகாச வார்த்தைகள். இப்படிப்பட்ட வார்த்தைகளெல்லாம் வாக்கினால் செய்யப்படும் பாப கருமங்கள்.

[illegible]



வேதாத்தியயனம், தேவபூஜை, இப்படிப்பட்ட காலத்தி
லுச்சரிக்கப்படும் புண்ணிய வார்த்தைகளுடனே பரநிந்தை
அசத்தியம் பரிகாசமான வார்த்தை லௌகிகவார்த்தை இவைக
ளைக் கலந்து அனுஷ்டிப்பது வாக்கினுல் செய்யப்படும் மிசிர பாப
கருமங்கள். புண்ணிய தீர்த்தஸ்நானம், குருதேவதைகளுடைய
நமஸ்காரம், தேவபூஜை, பிரதக்ஷிணம், சத்துக்களுடைய தெரி
சனம், கொடை, உலகானுக்கிரகமாய் சஞ்சரிப்பது இவை முதலி
யன தேகத்தினுல் செய்யப்படுகிற காயிகபுண்ணிய கருமங்கள்.
பிறருக்குத் துன்பம்செய்தல், பிறருடைய ஸ்திரீகளுடன்சேருதல்,
திருட்டுத்தனம், துஷ்டசேர்க்கை. இவைமுதலியன தேகத்தினுல்
செய்யப்படும் காயிக பாபகருமங்கள். பிராம்மண போஜனர்த்தம்
பரஹிம்சை செய்தல், தேவாலயப் பிரதிஷ்டைக்காக பிறரு
டைய பொருளை யபகரித்தல், தண்ணீர்ப்பந்தல்வைத்து அதில்
கூலிக்கு வேலைசெய்தவர்களுக்குக் கூலிகொடாமை முதலிய
புண்ணியபாபத்தை கலந்து அனுஷ்டானம் செய்கிற கருமங்கள்
காயிக மிசிரகருமங்கள். இந்த மூன்றுவித கருமங்களையும் செவ்
வையாய் விசாரிக்க வேண்டியது. அப்படி விசாரிப்பதற்குப்
பலன் என்னவெனில், முக்கிய பலனென்றும் அவாந்தர பலனெ
ன்று மிரண்டுண்டு. அதெப்படி யென்ருல், இந்த மூன்றுவித
கருமங்களும் மூன்றுவித கரணங்களினுலேயே செய்யப் படுகின்
றன. ஆத்மாவோ ஆகாசம்போல ஒன்றிலும் பற்றற்றவனுயும்
நிரம்சனுயும் (பிரிதலற்றவனுயும் அல்லது அம்ச மல்லாதவனுயும்)
பரிபூரண சைதன்னிய சுவரூபனுயு மிருக்கிருனுகையால் ஒரு
கருமத்திற்கும் கருத்தாவல்ல. எவ்விடத்திலும் வியாபித்திருத்
தல், எல்லாவற்றையும் கிரகித்தல், சகலப் பிரபஞ்ச விஷயங்க
ளையும் அனுபவித்தல், எப்பவு மிருத்தல் இந்தசுவபாவத்தினுலே
ஆத்மாவென்று சொல்லப்படுகிறது. இவ்விதமாய் ஆத்ம சப்தத்
திற்கு அர்த்தம் சொல்லப்பட்டிருக்கிற தாகையினுலே ஒரு கரு
மமும் "சிதாகாச சுவரூபியான என்னைத் தொடமாட்டாது"
என்றறிந்து சமுசயத்தைவிட்டு திருடமான அனுபவத்திலேயே
யிருக்கிறது முக்கியபலன், பிர்ம்மஞான முண்டாயிருந்தாலும்
மூன்று கரணங்களையும் புண்ணிய கருமத்திலேயே நிறுத்த வே
ண்டியது.

அப்படிக் கூடாதபோது மிசிரகருமத்திலாவது நிருத்த வே
ண்டியது பாபகருமத்தில் ஒருபோதும் நிறுத்தக்கூடாது என்பதா
யறிந்து அவ்விதமாகவே யிருக்கிறது அவாந்தரபலன். வாழை
யைப் போஷிக்கிறவனுக்கு வாழைப்பழம் முக்கியபலன். அதி
னுடைய இலை புஷ்பம் முதலியவை அவாந்தரபலன். அப்படிப்
போல மூன்றுவித கரணங்களினுலே செய்யப்பட்ட கருமங்க
ளுடைய ஞானத்திற்கு முன்சொன்னபடி யிரண்டு பிரயோசன
மென்று தெரிந்துகொள்ளவேண்டியது. அப்படியானுல், தாமரை
யிலையில ஜலம்போல கருமத்தினுலே (கருமபலத்தில்) ஞானி
ஒட்டுகிற தில்லையென்றும் அவனுக்கு யாதொரு விதியாவது
நிஷேதமாவது இல்லையென்றும் அவனே அகருத்தா, கருமத்திற்கு
சாக்ஷி, அவன் கிருதகிருத்தியன் (செய்யவேண்டியதெல்லாம்
செய்தவன்) என்றும் சித்தாந்தம் செய்யப்பட்டிருக்க அவனுக்கு
அக்ஞானியைப்போல் புண்ணியகருமத்தையே அனுஷ்டிக்க வே
ண்டுமென்கிற விதியானது எப்படிப் பொருந்தும்? நிஜம்தான்,
ஞானி செய்யவேண்டியதை யெல்லாம் செய்தவன்தான், அவன்
கருத்தாவு மாகமாட்டான். அதில் சந்தேகமில்லை. அப்படி யிருந்
தாலும், பிர்ம்மவித், பிர்ம்மவித்வரன், பிர்ம்மவித்வரீயான், பிர்ம்ம
வித்வரிஷ்டன் (என நான்கு வகையார்). இவர்களில் பிர்ம்ம வித்வ
ரிஷ்டனே விதேகமுக்தன். இந்த வரிஷ்டனே விருத்தி சூன்னி
யன் (யாதொரு விஷயத்திலும் பிரவிருத்தி யற்றவன்). அவனுக்
குத் தான் விதி நிஷேதமில்லை. மற்ற மூவர்களுக்குமோ ஞானத்
தின் மகிமையினுலே விதி நிஷேதமில்லா விட்டாலும் விருத்தி
சூன்னிய மில்லாததினுலேயும் வியவகார மிருப்பதினுலேயும்
லோகானுக் கிரகத்தின்பொருட்டு ஸதாசாரத்திலேயே யிருக்க
வேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஆனுல், அது அவர்களுக்கு
விதிக்கப்பட் டிருக்கிறதல்ல. ஆகையினுலே தத்துவஞானியான
வன் கருமிகளின் மத்தியிலே கருமியைப்போல கருமத்தை அனு
ஷ்டிக்கவேண்டியது. வேதாந்தத்தின் மூலமாய் பிர்ம்மவிசாரம்
செய்கிறவர்கள் மத்தியிலோ கருமத்தைவிட்டு பிர்ம்மமே சத்தி
யம் மற்றதெல்லாம் அசத்தியம் என்கிற ஞானத்தையே உபதே
சிக்கத்தக்கது. இப்போது பிரகிருதத்தில் சொல்லவேண்டிய
தெதுவெனில், மூன்று கரணங்களுக்கும் கருத்திருத்துவமேயன்றி
ஆத்மாவுக் கில்லை என்பதுதான் நிச்சயிக்கப்பட்டது.

अथ त्रयाणां करणानां किं स्वयमेव कर्तृत्वम् - उतान्येन प्रेरितत्वम् - इति विचारे रागद्वेषादिना प्रेरितमेव कर्तृत्वं - न स्वयंकर्तृत्वं - रागद्वेषादिषु सत्सु करणत्रयं प्रवर्तते - असति न प्रवर्तत इत्यन्वयव्यतिरेकाभ्यां रागद्वेषादेः करणप्रवर्तकत्वम् अनुभवसिद्धम् - नन्वहं देवालयं कारयामि अहं तटाकं कारयामीत्यादि व्यवहारात् आत्मा कारयिता भवतीति चेन्न - आत्मनः निर्विकारस्य न क्वापि कारयितृत्वमुपपद्यते - आत्मनि कारयितृत्वं भातीति चेत् - जपाकुसुमसन्निधौ लोहितत्वं स्फटिक इव रागद्वेषादिनिष्ठकारयितृत्वमात्मनि भ्रान्त्या आरोप्यत इति ज्ञेयम् - स्वाभाविकं चेत् - न कोऽपि यत्नं कुर्यात् - स्वभावस्य स्वरूपत्वाच्च - स्वभावस्य नाशे स्वरूपस्यैव नाशः स्याच्च - आत्मज्ञानिनोऽपि कारयितृत्वं यदि स्यात् - आत्मा असङ्गः निष्क्रियः अकारयिता इति प्रतिपादिका "अदृष्टमव्यवहार्यमग्राह्यमलक्षणमचिन्त्यमव्यपदेश्यं प्रपञ्चोपशमं शान्तं शिवमद्वैतं चतुर्थं मन्यन्ते स आत्मा स विज्ञेयः" इति श्रुतिर्व्याहन्येत - कारयितृत्वस्य जन्यत्वे तज्जन्यमुक्तेरपि जन्यत्वप्रसङ्गाच्च - सुषुप्तावपि कारयितृत्वं दृश्येत -



பின்னும் மூன்று கரணங்களுக்கும் சுவயமாகவே கருத்திருத்துவமா? அல்லது வேறொன்றினால் பிரோபிக்கப்பட்டா? விசாரிக்குங்கால் இராகத் துவேஷாதிகளினாலே பிரோபிக்கப்பட்டதினால் கருத்தாவேயன்றி சுவயமாய் கருத்தாவல்ல. இராகத்துவேஷாதிக ளிருந்தால்தான் மூன்று கரணங்களும் பிரவிருத்திக்கின்றன. இல்லாவிட்டால் பிரவிருத்திக்கிறதில்லை என்கிற அந்வய வியதிரோகங்களினாலே (எந்த வஸ்து விருந்தால் மற்றொன்றிருக்குமோ அது அந்வயம்; எது இல்லாவிட்டால் மற்றொன்றிருக்கமாட்டாதோ அது வியதிரோகம். திருஷ்டாந்தம்—தகப்பனிருந்தால் பிள்ளையுமுண்டு. தகப்பனில்லாவிட்டால் பிள்ளையுமில்லை என்பதுபோல. இது ஜன்னிய ஜனகபாவ அந்வய வியதிரோகம். இன்னும் அந்வயவிய திரோகம் பலவிதமுண்டு). இராகத் துவேஷாதிகள் கரணங்களைப் பிரவிருத்திக்கச்செய்கிறதென்பது அனுபவசித்தமா யிருக்கிறது. ஆனால், "நான் தேவாலயம் கட்டுவிக்கிறேன்" "நான் தடாகம் வெட்டிவைக்கிறேன்" என்பது முதலிய வியவகாரங்களினாலே ஆத்மா செய்விக்கிறவனாக வாகட்டுமே என்றால், அப்படியில்லை. ஆத்மா விகாரமற்றவனானதினாலே யாதொரு விஷயத்திலும் கருத்தாவாகிறதில்லை. ஆகையால், ஆத்மா செய்விக்கிறானென்பது பொருந்தாது. ஆத்மாவிடத்தில் செய்விக்குதல் காணப்படுகிறதே யென்றாலோ, செம்பருத்திப்பூ சம்பந்தமான சிகப்பு ஸ்படிகத்தில்போல் (பூவின் சம்பந்தத்தால் ஸ்படிகம் செகப்பாயிருக்கிறதாகக் காணப்படுவதுபோல்) இராகத்து வேஷாதிக ளிடத்திலுள்ள செய்விக்கிற செய்கையானது ஆத்மாவிடத்தில் பிராந்தியினா லாரோபிக்கப்படுகிறது. (செய்விக்குகை ஆத்மாவுக்கு) சுவபாவமானால் அதை நசிக்கச்செய்யும் பொருட்டு எவனும் பிரயத்தினம் செய்யமாட்டான். சுவபாவம் சுவரூபமானதினால் எப்படியானாலும் சுவபாவத்தினுடைய நாசத்தினாலே சுவரூபநாசமே யுண்டாகும். ஆத்மஞானிக்குங்கூட செய்விக்குகை யுண்டானால் ஆத்மா சங்கமற்றவன் கிரியையற்றவன் செய்விக்காதவன் என்று சொல்லுகிற சுருதி நிராகரிக்கப்பட்டதாகும். செய்விக்குகை யுண்டாக்கப்பட்டதானால் அதினாலுண்டாகிற முக்தியும் உண்டாக்கப்பட்டதாகவேயாகும். (அப்படி யுண்டாக்கப்பட்டதாகில்) சுஷுப்தியில்கூட செய்விக்குகை காணப்படவேண்டும்.

तस्मादात्मनः कारयितृत्वं न स्वाभाविकम् । किं त्वागन्तुकमेव । ननु सुषुप्तौ कारयितृत्वादर्शनादेवात्मनः कारयितृत्वं नास्तीति वक्तुं न शक्यते - यथोपाध्यायस्याध्यापकत्वं विद्यमानमपि शिष्याभावकाले न दृश्यते - तद्वत्सुषुप्तौ करणसंयोगाभावाच्च विद्यमानमपि कारयितृत्वं न दृश्यते - जाग्रत्स्वप्नयोः करणसंयोगसद्भावाच्च दृश्यत इति वक्तुं शक्यत्वादिति चेन्न - जाग्रदवस्थायां तूष्णींभावावस्थायां - करणसंयोगसद्भावाच्च - कारयितृत्वं दृश्येत - न दृश्यते - तस्मादागन्तुकमेवेति वक्तव्यम् - अग्नितप्तायस्यग्निनिष्ठौष्ण्यप्रकाशादयः - अयसि भान्ति - तद्वदेवाज्ञानाद्रागद्वेषादिनिष्ठकारयितृत्वमात्मनि - आत्मनिष्ठाकारयितृत्वं रागद्वेषादिष्ववभाति - ननु चेतनयो रागद्वेषयोः कथं कारयितृत्वं - न हि घटः घटान्तरं प्रेरयतीति चेत् सत्यम् - तथापि क्वचिद्योग्यतावशाज्जडः प्रेरयति - योग्यताभावाच्च क्वचिन्न प्रेरयति - यथा जडोऽप्यग्निः - गन्धकादि [illegible] नालिकान्तस्थमयःपाषाणं प्रेरयित्वा चतुरङ्गसेनां हन्ति ॥



அப்படிக் காணவில்லை யாகையால், ஆத்மாவுக்குச் செய்விக்குகை சுவபாவமல்ல. பின்னெதுவெனில் ஆகந்துகமே. (ஆக்ஷேபம்) ஆனல். சுஷுப்தியில் செய்விக்குகை காணப்படாததினலேயே ஆத்மாவுக்கு செய்விக்குகை யில்லையென்று சொல்லக் கூடாது. எப்படி யென்ருல், உபாத்தியாயனுக்கு அத்தியயனம் செய்விக்குகை இருந்தாலும் சிஷியர்களில்லாதகாலத்தில் அது காணப்படுகிறதில்லை. அதுபோல சுஷுபதியில் ஆத்மாவுக்குக் கரணங்களுடைய சம்பந்த மில்லாததினலே கரணங்களிருந்தாலும் செய்விக்குகை காணப்படுகிறதில்லை. ஜாக்கிரத் சுவப்னங்களிலே கரணங்களுடைய சம்பந்த மிருக்கிறபடியினலே செய்விக்குகை காணப்படுகிறதென்று சொல்லலாமே யென்ருலோ, (அப்படிச் சொல்லக் கூடாது, ஏனென்ருல்) ஜாக்கிரத் அவஸ்தையில் உதாசீனனுயும் (எந்தச் செய்கையிலும் தான் சம்பந்தப்படாமல் ஒதுங்கி யிருக்கிறவனுயும்) தூஷ்ணீம் பாவனுயு மிருக்கையில் கரணசம்பந்த மிருக்கிறபடியினலே செய்விக்குகை காணப்படவேண்டும். ஆனல், அப்படிக் காணப்படவில்லை. ஆகையால், ஆகந்துகமென்றே சொல்லவேண்டும். (அக்கினியில் காய வைத்த) இரும்பினுடைய நீளம் குட்டை அக்கினியிலும் அக்கினியினுடைய உஷ்ணத்துவம் பிரகாசம் இரும்பிலும் ஒன்றிலொன்றை ஆரோபிப்பதினல் விளங்குகிற தெப்படியோ அப்படி அஞ்ஞானத்தினலேயே இராகத்து வேஷாதிகளுடைய செய்விக்குகை ஆத்மாவிலும் ஆத்மாவினுடைய செய்விக்காமை இராகத்து வேஷாதிகளிலும் விளங்குகின்றது. ஆனல் அசேதனமாகிய ராகத்து வேஷாதிகளுக்குச் செய்விக்குகை எப்படி சொல்லக்கூடும்? ஒரு குடமானது மற்றொருகுடத்தை ஏவுகிறதென்பது அசம்பாவிதமே என்ருலோ சரிதான். அப்படியிருந்தாலும் சிலவிஷயத்தில் யோக்கியதை யிருப்பதால் ஜடமும் கூட பிரோரேபிக்கிறது. சில விஷயத்தில் யோக்கியதை இல்லாததினல் பிரோரேபிக்கிறதில்லை. எப்படியென்ருல் அக்கினி ஜடமாகவிருந்தாலும் கெந்தகம் முதலானவைகளுடன் கூடியும் கரிப்பொடி முதலியவைகளுடன் சேர்ந்து மிருக்கிற பாண மருந்துடன் சம்பந்தப்பட்ட நிமிஷத்தில் பீரங்கிக் குள்ளிருக்கிற பெரிய இரும்புக்குண்டை ஏவி சதுரங்க சேனைகளை நாசம் செய்விக்கிறது.

கிஞ்ச ப்ரேதஶரீரம் ஜடமபி ஸ்வஜ்ஞாதி க்ரியாணாமபரக்ரியாம்

ப்ரதிஷ்டம் காரயித்ரு பவதி - ஏவமேவ ஜடமபி ராகத்வேஷாதிகார

யித்ரு பவதி - தர்ஹி ஸர்வாந்தர்யாமீ ஹ்ருஷீகேஶ: - இதி வாக்

யார்த்த: ஶ்ருதே: கிம் தாத்பர்யமிதி சேத் - ஸூர்யவத் ஸந்நிதிமாத்ரேண

ஸகலஜநாநாம் புண்யபாபகர்மாநுகூலோ வர்ததே - தத்தாத்

பர்யம் - ததா ஆத்மா ஸந்நிதிமாத்ரேண யதா ஸர்வேஷாம் - ததா ஸூர்யேணாபி ஸ

ம்பந்தம் - ஸர்வப்ராணிகர்மணாம் ஸந்நிதிமாத்ரேண காரணத்வே ஸதி

ஆத்மநோ யதா ந ஸம்பந்த: - ததா ப்ராணிகர்மபிராத்மா ந லிப்யதே -

ததாத்மநோ நிரஞ்ஜநத்வ நிர்விகாரத்வாதிகம் - ஏவம் ப்ரஸித்த

ஸ்வரூபமபி குருணா உபதிஷ்டமபி ப்ரதிபந்தத்ரய

காரணாந்நிஶ்சயோ பவதி - ப்ரதிபந்தத்ரயம் து ஸம்ஶயபாவநா . அஸம்

பாவநா - விபரீதபாவநா சேதி।



பின்னும் பிரேத சரீரம் ஜடமானாலும் தன்னுடைய அபரக்கிரியைக்குத் தன்பந்துக்களை ஏவுகிறதாகவாகிறது. இப்படிப்போல ராகத்துவேஷாதிகள் அசேதனமானாலும் செய்விக்கிறதாக ஆகின்றன. ஆனால் ஆத்மா சர்வாந்தரியாமி இருஷீகேசன் (இந்திரியங்களுக்கு நியாமகன்) என்கிற சுருதிக்குத் தாத்பரிய மென்னவெனில், சூரியனைப்போல சந்நிதி மாத்திரத்தினால் சகல ஜனங்களுடைய புண்ணிய பாபகருமங்களுக்கு * அனுகூலமா யிருக்கிறா னென்பது தாத்பரியம். அப்படியானால் ஆத்மா, சந்நிதி மாத்திரத்தினாலேயாவது சகலப் பிராணிகளுடைய கருமத்திற்குக் காரணமாகிறானல்லவா (அதினாலே) ஆத்மாவுக்கு புண்ணிய பாபகருமங்களின் பலனில் சம்பந்தமிருக்கலாமே என்றாலோ, ஆதித்தன் தன்னுடைய சந்நிதி மாத்திரத்தினாலே சகலஜனங்களுடைய புண்ணிய பாபகருமங்களுக்கு அனுகூலமாயிருந்தாலும் அந்தப் புண்ணியமும் அந்தப் பாபமும் அவைகளுடைய பலனும் எப்படி ஆதித்தனை யொட்டுகிறதில்லையோ அப்படி ஆத்மாவுமென் றறியத்தக்கது. சந்நிதிமாத்திரத்தினாலே தனக்கு (தன் சேஷ்டைக்கு) அனுகூலமா யிருக்கிற காந்தக்கட்டியானது இரும்பினுடைய சேஷ்டையினாலே தொடப்படாதது எப்படியோ அப்படிப் பிராணி கருமமும் ஆத்மாவை தொடமாட்டாது. ஆகையினாலே ஆத்மாவினுடைய நிரஞ்சனத்துவம் (ஒன்றிலும் ஒட்டாத சுவபாவம் அல்லது கல்மிஷமற்ற சுவபாவம்) நிர்விகாரத்துவம் இவைகளுக்குக் கெடுதியில்லை. இப்படிப்பட்ட பிரசித்தமான ஆத்ம சுவரூபமானது குருவினால் உபதேசிக்கப்பட்டாலுங் கூட பிரதிபெந்தத்திரயத்தினால் நிச்சயமுண்டாகிறதில்லை. பிரதிபெந்தத்திரய மெதுவெனில், ஸம்சயபாவனை அஸம்பாவனை விபரீதபாவனை என்பவைகளே.

---

* ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி, ஏஷ ஹ்யேவாஸாது கர்ம காரயதி

இவனே சாதுகருமத்தைச் செய்விக்கிறான் இவனே அசாது கருமத்தைச் செய்விக்கிறான் என்கிற இந்தக் கௌஷீதகீ பிராம்மண உபநிஷத்து வாக்கியத்தினால் நல்ல கருமத்தையும் துஷ் கருமத்தையும் அவனே செய்விக்கிறானென்று சொன்னதாகவாகிறது. அதின் தாத்பரிய மென்னவெனில், உலகத்தில் நல்ல கருமத்தையும் கெட்ட கருமத்தையும் சூரியனுடைய சந்நிதி மாத்திரத்தினாலே செய்வதுபோல ஆத்மாவினுடைய சந்நிதி மாத்திரத்தினால் ராகத்துவேஷாதிகளால் பிரேரேபிக்கப்பட்ட கரணங்கள் செய்விக்கின்றன.

[illegible]



ருக் முதலிய (வேத) சாகைகளிலே சொல்லப்பட் டிருக்கிற உபநயநம் முதலிய கருமங்கள் பலவிதமாயிருப்பதுபோல அதே ருக்முதலிய சாகைகளில் உபதேசிக்கப்பட்டிருக்கிற ஆத்ம தத்துவமும் அநேகவிதமா, அல்லவா என்று உண்டாகும் சமுசயம் ஸம்சயபாவனே. இந்த சம்சயபாவனே யானது சகலமான வேதாந்த தாத்பரிய வரையறவு சுவரூபமான சிரவணத்தினுலே நிவிருத்தியாகிறது. இப்படி சகல வேதாந்தங்களுடைய தாத்பரியமும் அத்வைத பிர்ம்மத்திலேயே (களடப்பிரும்மாநங் தீயம்பார்க்க)என்கிற சிரவணத்தினுல் (கேள்வியினுலே) பிரமாண விஷயத்திலுள்ள (ஒவ்வொரு வேதாந்தபாசத்திலும் ஒவ்வொருவிதமாய் துவைத அத்துவைத முதலியவை சொல்லியிருந்தபோதிலும் மேல் உதாகரித்த வாக்கியத்தினுல் எல்லாப் பிரமாணமாகிற உபநிஷத்களும் அத்துவிதிய பிர்ம்மத்தையே சொல்லுகிறதென்று நிச்சய மடைந்ததினுல் அந்தப் பிரமாண விஷயத்திலுள்ள) சமுசயம் நீங்கினுலும் ஜீவேசுவரர்கள் ஜகத் இவைகள் பரஸ்பர பேதமுள்ளதாக பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகையில் இந்த அத்துவைதம் எப்படி சம்பாவிதமாகு மென்கிற புத்தியானது அஸம்பாவனே என்று சொல்லப்படுகிறது. இந்த அஸம்பாவனேயானது சுவப்நதிருஷ்டாந்தம் முதலிய யுக்தியைக்கொண்டு மனனம் (ஆலோசிக்கை) செய்வதினுலே நசிக்கிறது. இப்படி சிரவண மனனங்கள் செய்தாலும் அநாதியான அவித்தையாகிற வாசனேயினுலே சகலமான ஜகத்தும் முன்போலவே (சிரவண மனனத்திற்கு முந்தியிருந்தது போலவே) சத்தியமாக தோற்றுவதுதான் விபரீதபாவனே. இந்த விபரீதபாவனேயானது பிர்ம்மாகாரமான விருத்தி (பிர்ம்மாகாரமாக ஆய்விடுதல்) யினுடைய பிரவாக ரூபமான (இடைவிடாமல் ஓடிக்கொண்டிருக்கிற தண்ணீர், அல்லது இடைவிடாத எண்ணெய் தாரைபோலிருக்கிற) நித்தியாஸத்தினுலே (இடைவிடாதத்தியானமாகிற சமாதியினுலே) நசிக்கிறது. இப்படி பிரதிபெந்தத்திரயத்தையும் நாசம் செய்யாமல் போனுல் எல்லாவற்றையும் எரிக்கிறதா யிருந்தாலும் அக்கினியானது மணிமந்திரம் முதலிய பிரதி பந்தங்களினுலே (கட்டுப்படுதல் அல்லது தடைப்படுதல்) ஒரு துரும்பைக்கூட எரிக்க சக்தியற்ற தாகிறதுபோல ஞானக்கினியும் பிரதிபெந்தத்தினுலே தடுக்கப்பட்டதாய்க் கொண்டு அக்ஞானத்தையும் அதின் காரியங்களேயும் அற்பங்கூட எரிக்க சக்தியற்றதாய் விடும்.

[illegible]



முன் சொல்லியிருக்கிறபடிக்கு இந்த பிரதி பெந்தத்திரயங்களும் தள்ளப்பட்டதானுல் உடனே அக்கினிதுரும்பை எரிப்பது போல் அவித்தையையும் அதின் காரியங்களையும் எரிக்கிறதற்கு சக்தியுடையதாக வாகிறது. பின்னும் "தாத்பரிய நிர்ணயம் செய் "கிற விஷயத்தில் உபக்கிர மோபஸம்ஹாரங்கள், அப்பியாசம், "அபூர்வதா, பலன், அர்த்தவாதம், உபபத்தி இந்த அடையாளங்க "ளிருக்கவேண்டும்." என்கிற இந்த வசனப்படிக்கு இந்த ஆறு அடையாளங்களை அவசியம் கவனிக்கவேண்டியது.

(க) உபக்கிரமோப ஸம்ஹாரங்க ளாவன — சாந்தோக்கியோபநிஷத் ௬-வது அத்தியாயத்தில் "ஓ! ஸௌம்மியா? முதலிலிந்த ஜகத்தானது சத்தாகவே யிருந்தது. இரண்டாவ தில்லாததாய் ஒன்ருகவே யிருந்தது" என்று துடங்கி "இந்த ஜகத்தெல்லாம் இதையே ஆத்மாவாக வுடையது. இதுதான் சத்தியம்" என்று அகண்டைகாஸத்தில் முடிந்திருக்கிறது. இதுதான் உபக்கிரமோபஸம்ஹார அடையாளங்கள். (இதின் தாத்பரிய மென்னவெனில் ஒருவாக்கியம் எதைசொல்ல துடங்கினதோ முடிவிலும் அதற் கொத்துமையாய் முடிந்திருக்க வேண்டுமென்பதே.)

(உ) தத்துவமஸி என்கிற வாக்கியத்தை (அந்த உபநிஷத்தில்) ஒன்பது தடவை சொல்லியிருப்பதினுலே இதுதான் அடிக்கடி பின்னும் பின்னும் சொல்வதாகிய அப்பியாசம்.

(௩) அகண்டை கரஸம்பிரத்தியக்ஷாதி பிரமாணங்களுக்கு விஷயமல்ல வென்பது அபூர்வதா.

(௪) மேற்படி சுருதிப்படிக்கு அகண்டை கரஸஞான மடைந்தவனுக்குப் பிராரப்த போகநாசத்திற்கு பிறகு விதேககைவல்லிய முக்தி என்பதே பலம்.

(௫) அர்த்தவாத மெதுவெனில்.

அர்த்தவாதம் ஏழுவகைப்படும். அவையாவன - சிருஷ்டி, ஸ்திதி, பிரளயம், பிரவேசம், ஸம்யமனம், தத்துவம் பதார்த்தபரிசோதனே, பலம், இப்படி ஏழுவிதம். இவைகளில் "அந்த இந்த ஆத்மாவிடத்தி லிருந்து ஆகாசமுண்டாச்சுது."

[illegible]



இதுமுதலிய சிருஷ்டி அர்த்தவாதரூபமான சுருதிகள் "ஆகாசம் முதலான சகலமும் பிர்ம்மத்தி னிடத்திலிருந் துற்பத்தியானபடியினுலும் அதனிடத்திலேயே யிருக்கிறபடியினுலும் அதினிடத்திலேயே லயிக்கிறபடியினுலும் மண்ணிலிருந்து உற்பத்தி ஸ்திதிலயங்களையடைந்த குடம் முதலானதற்கும் மண்ணிற்கும் பேதமில்லாததுபோல (சிருஷ்டி ஸ்திதிலயங்களுக்கு) காரணம் பிர்ம்மம் மாத்திரமே'' என்று நமக் கறிவிக்கிறவைகளாக விருந்துகொண்டு மகாவாக்கியத்தில் சொல்லப்பட்ட, பிர்ம்மத்தினுடைய இரண்டாவதற்ற தன்மையை ஆதரிக்கின்றன. (இதுவரையில் சிருஷ்டி ஸ்திதிப் பிரளய அர்த்தவாத சுருதிகள் சொல்லப்பட்டன.)

(நான்காவதான பிரவேசமாவது) ''அதுவே யெல்லையாகிய தலையுச்சியில் துவாரம்செய்துகொண்டு உள்ளே பிரவேசித்தது அதை சிருஷ்டித்து அதற்குள் பிரவேசித்தது ஆத்மா வாகிய நானே ஜீவசுவரூபமாய்ப் பிரவேசித்துப் பெயர்களையும் ரூபங்களையும் விளங்கச் செய்கிறேன்'' இவைமுதலிய சுருதிகள் பிர்ம்மமே ஜீவரூபமாய் பிரவேசித்த தென்பதை விளங்கச்செய்துகொண்டு வெளியிலிருந்து வீட்டுக்குள்ப் பிரவேசித்த தேவதத்தனைப்போல ஜீவ பிர்ம்மதிற்கு அபேதத்தைச் சொல்லுகிற மகாவாக்கியார்த்தத்தை ஆதரிக்கின்றன. இது பிரவேச அர்த்தவாத சுருதிகள்.

(ஐந்தாவது, ஸம்யமனமாவது) "எவன் பூமியிலிருக்கிருனே எவன் பூமிக்குள்ளு மிருக்கிருனே எவனை பூமியறியமாட்டாதோ எவனுக்குப் பூமிசரீரமோ எவன் பிரதிவிக்குள் ளிருந்துகொண்டு பிரோபிக்கிருனே இவன்தான் உன்னுடைய ஆத்மா, இவன்தான் அந்தர்யாமி, இவன்தான் அமிருதன்.'' இவைமுதலிய நியமன (நிச்சயம்செய்கிற) சுருதிகள் அத்தியந்த மபேதமாயிருக்கையில் பிரோ பிக்கிறவன் பிரோபிக்கப்படுகிறவன் என்கிற வியவஸ்தை யில்லாத்தினுலே அவ்விரண்டுக்கும் அபேதத்தையே யாதரிக்கின்றன. இது ஸம்யமன அர்த்தவாத சுருதிகள்.

(ஆருவது, தத்துவம் பதார்த்தபரி சோதனமானது) "இந்த புருஷன் அந்நரஸ சுவரூபமா யிருக்கிருன்."

"அக்கிநியின் செவப்பு ரூபமெதுவோ" இவைமுதலிய தத்துவம் பதார்த்தத்தைப் பரிசோதிக்கச் செய்கிற சுருதிகள் ஜீவேசுவரர்களுக்குள் பரஸ்பர பேதமான தருமங்களை நீக்கி அவர்களுக்குள் ஐக்கியத்தையே வெகுமானிக்கின்றன. இது தத்துவம் பதார்த்த பரிசோதனை அர்த்தவாத சுருதிகள்.

(ஏழாவது, பலம் எதுவெனில்) "பிர்ம்ம வித்தானவன் பிர்ம்மத்தை யடைகிறான் அமிருதனுக வாகிறான்" இவை முதலிய சுருதிகள் அபேதஞானத்திற்கு நிரதிசயபலத்தைக் காண்பிவிக்கிறதினாலே அபேதத்தை விளக்கிக்கொண்டு அதை வெகுமானிக்கின்றன. இது பலார்த்தவாத சுருதிகள். இவ்விதமாய் சிருஷ்டி ஸ்திதி பிரளய பிரவேச ஸம்யமன தத்துவம் பதார்த்த பரிசோதனைபலம் இவைகளைச் சொல்லுகின்ற ஏழுவித அர்த்தவாதங்களினாலே பலப்படுத்தப்பட்டு ஜீவபிர்ம்மைக்கியமாகிய அகண்டைகரஸத்தையே துணைவாக்கியங்களுடன் சேர்த்து (சுருதி) சொல்லுகின்றது. ஆகையினாலே அகண்டைகரஸமாகவே மகாவாக்கியார்த்தம் சொல்லவேண்டியது.

* (சு) உபபத்தி எதுவெனில் "ஓ! சௌம்மியா! எப்படி ஒரு மண்ணினாலே" என்கிறது முதலிய திருஷ்டாந்தம் சொல்லப்பட்டிருக்கிறதுதான் உபபத்தி என்கிற பெயரை யுடைய ஆறுவது.

இப்படி ஆறுவித அடையாளங்களினாலே சுருதிகளின் தாத்பரியத்தை கிரகிக்கிறதுதான் சிரவண மெனப்படுகிறது.

இப்போது சொல்லவேண்டிய பிரகிருத மெதுவெனில் முன் சொல்லியிருக்கிற பிரகாரம் விசாரித்து இராகத்து வேஷாதிகளினால் ஏவப்பட்டதாய்க் கொண்டு மூன்றுவித கரணங்கள் மூன்றுவித கருமத்தைச் செய்கின்றன. பிரதானியினால் பிரேரேபிக்கப்பட்ட சேனைகளினால் அடைந்த ஜயத்தை இராஜாவானவன் "நான் ஜயித்தேன்" என்று தன்பேரில் ஆரோபித்துக் கொள்ளுகிறான். இப்படிப்போல ஆத்மாவும் இராகத்து வேஷாதிகளுடைய செய்கையான பிரேரேபகத்துவத்தை அக்ஞானத்தினால் தன்னிடத்தில் நினைக்கிறான். இப்படி ஆத்மாவுக்குச் செய்தலு செய்வித்தலுமில்லையென்று எவன் உறுதியாய் நிச்சிக்கிறானோ அவனே ஜீவன் முக்தன்.

ஐந்தாவது வருணகம் முற்றிற்று.

---

* இதற்கு மூலவாக்கியம் சுசு-வது பக்கத்தில் காண்க.

## 𑌷𑌷𑍍𑌠𑌵𑌰𑍍𑌣𑌕𑌪𑍍𑌰𑌾𑌰𑌮𑍍𑌭𑌃.

𑌓𑌂 𑌪𑍂𑌰𑍍𑌵𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌜𑍍𑌞𑌾𑌤 𑌦𑍁𑌃𑌖𑌾𑌦𑌿𑌸𑌪𑍍𑌤𑌕𑍇 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂 𑌕𑌰𑍍𑌮𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌾𑌦𑌿 𑌚 𑌉𑌤𑍍𑌤𑌰𑍋𑌤𑍍𑌤𑌰𑌂 𑌹𑍇𑌤𑍁𑌤𑍍𑌵𑍇𑌨𑍋𑌕𑍍𑌤𑌾𑌨𑌿 - 𑌇𑌦𑌾𑌨𑍀𑌂 𑌷𑌷𑍍𑌠𑌵𑌰𑍍𑌣𑌕𑍇 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌾𑌦𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌭𑍇𑌦𑌾𑌃 - 𑌅𑌭𑌿𑌮𑌾𑌨𑌃 - 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌃 - 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌞𑍍𑌚 𑌕𑌥𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 - 𑌰𑌾𑌗𑌃 - 𑌦𑍍𑌵𑍇𑌷𑌃 - 𑌕𑌾𑌮𑌃 - 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 - 𑌲𑍋𑌭𑌃 - 𑌮𑍋𑌹𑌃 - 𑌮𑌦𑌃 - 𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌯𑌮𑍍 - 𑌈𑌰𑍍𑌷𑍍𑌯𑌾 - 𑌅𑌸𑍂𑌯𑌾 - 𑌦𑌮𑍍𑌭𑌃 - 𑌦𑌰𑍍𑌪𑌃 - 𑌅𑌹𑌂𑌕𑌾𑌰𑌃 - 𑌇𑌚𑍍𑌛𑌾 - 𑌭𑌕𑍍𑌤𑌿𑌃 - 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 - 𑌇𑌤𑌿 𑌰𑌾𑌗𑌦𑍍𑌵𑍇𑌷𑌾𑌦𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌯𑌃 𑌷𑍋𑌡𑌶 - 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌵𑌿𑌷𑌯𑌕𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌃 - 𑌰𑌾𑌗𑌃 - 𑌅𑌪𑌕𑌾𑌰𑌕𑌰𑍍𑌤𑌰𑌿 - 𑌪𑍍𑌰𑌤𑍍𑌯𑌪𑌕𑌾𑌰𑍇𑌚𑍍𑌛𑌾 𑌦𑍍𑌵𑍇𑌷𑌃 - 𑌗𑍃𑌹𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌾𑌦𑌿𑌸𑌮𑍍𑌪𑌾𑌦𑌨𑍇𑌚𑍍𑌛𑌾 𑌕𑌾𑌮𑌃 - 𑌤𑌸𑍍𑌯 𑌵𑌿𑌘𑍍𑌨𑌕𑌰𑍍𑌤𑌰𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇 𑌜𑌾𑌤𑌃 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 - 𑌸𑍍𑌵𑌸𑌮𑍍𑌪𑌾𑌦𑌿𑌤𑌧𑌨𑍇 𑌕𑌿𑌞𑍍𑌚𑌿𑌦𑌪𑌿 𑌵𑍍𑌯𑌯𑌂 𑌨 𑌕𑍁𑌰𑍍𑌯𑌾𑌮𑌿𑌤𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 𑌲𑍋𑌭𑌃 - 𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌮𑌦𑍇𑌨 𑌕𑍃𑌤𑍍𑌯𑌾𑌕𑍃𑌤𑍍𑌯𑍇 𑌅𑌵𑌿𑌚𑌾𑌰𑍍𑌯 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 𑌸𑍍𑌥𑌾𑌨𑌂 𑌮𑍋𑌹𑌃 - 𑌸𑍍𑌵𑌸𑍍𑌯 𑌸𑌮𑍍𑌪𑌦𑌸𑍍𑌤𑌿 𑌕𑌿𑌂𑌵𑌾 𑌕𑌿𑌂𑌵𑌾𑌕𑌰𑍍𑌤𑍁𑌂𑌨𑌶𑌕𑍍𑌨𑍋𑌮𑍀𑌤𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌮𑌦𑌃 - 𑌸𑍍𑌵𑌸𑌮𑌾𑌨𑌸𑌮𑍍𑌪𑌨𑍍𑌨𑍇 𑌪𑍁𑌰𑍁𑌷𑍇 𑌅𑌸𑌹𑌨𑌂 𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌯𑌮𑍍 - 𑌇𑌦𑌂 𑌦𑍁𑌃𑌖𑌂 𑌤𑌂 𑌵𑌿𑌹𑌾𑌯 𑌮𑌤𑍍𑌸𑌮𑍀𑌪𑌂 𑌕𑌥𑌮𑌾𑌗𑌤𑌮𑌿𑌤𑌿 𑌚𑌿𑌤𑍍𑌤𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍀𑌰𑍍𑌷𑍍𑌯𑌾 - 𑌇𑌦𑌂 𑌸𑍁𑌖𑌂 𑌮𑌮𑍈𑌵 𑌤𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌨 𑌕𑌥𑌮𑌾𑌗𑌤𑌮𑌿𑌤𑌿 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑌸𑍂𑌯𑌾॥



## ௬ - வது வருணகம்.

ஓம். முந்திச் சொல்லப்பட்ட துக்கம் முதலிய ஏழுவிஷயங் களில் துக்கம், சரீரம், கருமம், இராகத்துவேஷாதிகள் இவைகள் முறையே ஒன்றுக் கொன்று ஏதுவாக சொல்லப்பட்டன. இந்த ஆருவதுவருண கத்திலோ இராகத்து வேஷம்முதலிய விருத்தி (செய்கை அல்லது சுழல்தல்) பேதங்களும் அபிமானமும் அவி வேகமும் அக்ஞானமும் சொல்லப் படுகின்றன.

இராகம், துவேஷம், காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம், ஈருஷை, அசூயை, டம்பம், தருப்பம், அகங் காரம், இச்சை, பக்தி, சிரத்தை, என இராகத்துவேஷம் முதலிய விருதிகள் பதினாறு.

(௧) ஸ்திரீவிஷயமான சித்தவிருத்தி இராகம்.

(௨) தனக்கபகாரம் செய்தவனுக்குப் பிரதிசெய்ய வேண்டு மென்கிற இச்சை துவேஷம்.

(௩) பூமிவீடு முதலியவை சம்பாதிக்கவேண்டு வென்கிற இச்சை காமம்.

(௪) இப்படிப்பட்ட (மேல்கண்ட) இச்சைக்கு விரோதம் செய்யகிறவ னிடத்திலுண்டாகிற கோபம் குரோதம்.

(௫) தான் சம்பாதித்த பொருளில் சொற்பங்கூட சத்பாத் திரத்தில் சிலவிடக்கூடாதென்கிற புத்திலோபம்.

(௬) ஐசுவரிய மதத்தினுல் இன்னது செய்யவேண்டியது இன்னது செய்யத்தகாத தென்பதை விசாரிக்காமல் மந்தனு யிருப்பது மோகம்.

(௭) தனக்குச் சம்பத்திருக்கிறது தன்னுல் செய்யக்கூடாத தாய் எதிருக்கிறதென்கிற புத்திமதம்.

(௮) தனக்குச் சமானமான சம்பத்துடையவனைக்கண்டு பொருமைகொள்ளுவது மாச்சரியம்.

(௯) இந்தத்துக்கம் அவனை விட்டு எனக்கெப்படி வந்ததென் கிற சித்தவிருத்தி ஈருஷை.

(௧௦) இந்தச்சுகம் எனக்கே யுள்ளது அவனுக்கில்லை. அவ னுக் கெப்படி வரலாமென்கிற சித்தவிருத்தி அசூயை.

[illegible]



(கக) இத்தருமத்தினு லெனக்கு மிகவும் பிரசித்தியுண்டாக வேண்டுமென்கிற சித்தவிருத்தி டம்பம்.

(கஉ) எனக்குச் சமானவானவன், ஒருவனு மில்லையென்கிற புத்திதருப்பம்.

(கஙு) சகல விஷயத்திலும் தனக்குச் சக்தியுண்டென்கிறது அகங்காரம்.

(கச) உண்பது மலஜலம் விடுவது முதலான, விட்டுவிடக் கூடாததாகிய, கருமம் செய்யவேண்டுமென்கிற எண்ணம் இச்சை.

(கரு) குருவினிடத்திலேயும் ஸஜ்ஜனங்க ளிடத்திலேயும் தேவதைகளிடத்திலேயும் அதிகப பிரீதிபக்தி.

(கசூ) யாகாதி கருமங்களிலேயும் வேதம் முதலிய வாக்கியங்களிலேயும் குரு உபதேசத்திலேயும் விசுவாசம் சிரத்தை.

இப்படி இராகத்துவேஷாதிகள் பதினுறுவிதம்.

ஆத்மவிசாரம் செய்கிற விஷயத்திலே சித்தவிருத்தி விஷயமான விசாரத்தினு லென்ன பிரயோஜன மென்ருலோ, சகல ஜீவர்களுக்கும் பெந்தமோக்ஷங்கள் மனதினுலேயே (யுண்டாகின்றன) வேறென்றினுலல்ல. எப்படியெனில், சுவபாவமாகவே நிர்மலமாயுள்ள மனதுக்கு அசுத்தத்துடன் சம்பந்தம் பெந்தமாகிறது. நிர்மல சுவரூபமாயிருக்குதலே மோக்ஷம். இராகம் முதலாயுள்ள பதினுன்கு (மனே) விருத்திகளும் அசுத்தங்கள். பக்தி சிரத்தை இவ்விரண்டும் சுத்தமானவை. இராகம் முதலுள்ள பதிமூன்று விருத்திகளும் பிரயத்தின மன்றியிலேயே எல்லாருக்கும் அடிக்கடி வருகின்றன. (அவைகள்) பாபத்திலேயே மனிதர்களை பிரவிருத்திக்கச் செய்கின்றன. அந்த விருத்தியிலேயே (அந்த பதிமூன்று விருத்திகளுக்குமுள்ள சுவபாவங்களிலேயே) உழலுகிறவர்களுக்கு அதோ கெதியேயன்றி மேலான கெதியில்லை. இராகாதி விருத்திகளைத் தடுத்துப் பக்தி சிரத்தையோடு கருமங்களைச் செய்துவந்தால் கிரமக் கிரமமாய் சமுசாரநிவிருத்தியுண்டாகிறது. ஆகையினுலே புருஷனுனவன் தன்னுடைய சித்தத்தை செவ்வையாய் சோதித்து அசுத்தத்திற்கு ஏதுவான இராகம் முதலான விருத்திகளைத் தள்ளிவிட்டு (சித்த) சுத்திக் கேதுவான பக்திசிரத்தைகளிலேயே சித்தத்தை ஸ்தாபிக்கவேண்டியது.

[illegible]



இச்சையினுலே செய்யவேண்டியதான பசிதாகம் முதலிய விருத்திகளேயும் மலம் மூத்திரம் முதலிய கருமங்களேயும் அடக்குவது அசாத்தியமானது. அவைகளே அடக்குவதுனுலே துக்கமும் வரும். அந்தக் கருமங்களினுலே சுவர்க்கமுமில்லே நரகமுமில்லே ஆகையினுலே இச்சாசம்பந்தமான உணவு மலஜலம் விடுதல் முதலியவை செய்யவேண்டியதே. ஜாக்கிரத் சுவப்நங்களில் இராகம் முதலியவை யிருக்கிறதினுலே கருமமிருக்கிறது. சுஷுப்தி மூர்ச்சை சமாதி தூஷ்ணீம் பூதாவஸ்தை இவைகளிலே இராகாதிகளில்லே யாகையால் கருமமுமில்லே யென்கிற அந்வய வியதிரேகங்களினுலே இந்தக் கருமங்களுக்கு இராகாதிகள் ஏதுவென்பது நிச்சயம்.

அந்த ராகாதிகள் எதினுல் வருகின்றன?

அபிமானத்தினுல் வருகின்றன, அதெப்படி எனில், ஸ்திரீயானவள் தான் ஸ்திரீஜாதி என்று எதுவரையில் அபிமானமுள்ளவளா யிருக்கிருளோ, அதுவரையில் இந்த ராகாதிகளே முன்னிட்டு கணவனுக்கு சுசுரூஷை, வீட்டை பாதுகார்த்தல், சமயல் செய்தல், முதலிய கருமங்களில் பிரவிருத்திக்கிருள். புருஷனுக்கும் எதுவரையில் அபிமான மிருக்கிறதோ அதுவரையில் இராகாதிகளே முன்னிட்டுக்கொண்டு தாரம் முதலியவர்களே யடைவது பயிர்த்தொழில் வியாபாரம் முதலியவைகளில் பிரவிருத்தி யுண்டாகிறது. இப்படியே சகல ஜீவர்களுக்கும் வருணுசிரமம் முதலான அபிமானத்தினுலே இராகாதி மூலமாய் தங்கள் தங்கள் வியாபாரத்திலே பிரவிருத்தி யுண்டாகிறது ஆகையால் இராகம் முதலியவைகளுக்கு அபிமானமே காரணம். இந்த விசாரத்திற்கு பலன் என்னவெனில், முமுக்ஷுவான புருஷன் ஜாதிவருணுசிரமம் வயோவஸ்தை முதலிய அபிமானத்தை விட்டுவிடவேண்டியதென்பதே. அபிமானம் விடப்பட்டால் பெந்தமும் விடப்பட்டதாகும். அபிமானமிருந்தால் ராகாதிகளு மிருக்கின்றன. அபிமான மில்லாவிட்டால் இராகாதிகளுமில்லே. அதெப்படி யென்முல், சாக்கிரத் முதலிய அவஸ்தைகளிலே வருணுசிரமம் முதலிய அபிமான மிருப்பதினுலே ராகத்துவேஷாதி நிமித்தத்தினுலே பிரவிருத்தி யுண்டாகிறது. சுஷுப்திமுதலிய அவஸ்தைகளிலே வருணுசிரமம் முதலான அபிமான மில்லாததினுலே இராகத்து வேஷாதி நிமித்தத்தினுல் பிரவிருத்தி யில்லேயென்று அறி.

𑌤𑌰𑍍𑌹𑌿 𑌅𑌯𑌮𑌭𑌿𑌮𑌾𑌨𑌃 𑌕𑍇𑌨𑌾𑌗𑌚𑍍𑌛𑌤𑍀𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 - 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑍇𑌨𑌾𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 - 𑌤𑌦𑍍𑌯𑌥𑍇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌂 𑌜𑍀𑌵𑌾𑌨𑌾𑌂 𑌦𑍇𑌹𑌵𑍍𑌯𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌤𑍍𑌵𑍇 𑌸𑌤𑍍𑌯𑌪𑌿 𑌵𑌿𑌵𑍇𑌕𑌾𑌭𑌾𑌵𑌾𑌦𑍇𑌵 - 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 𑌅𑌹𑌂 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 - 𑌅𑌹𑌂 𑌵𑍈𑌶𑍍𑌯𑌃 - 𑌅𑌹𑌂 𑌶𑍂𑌦𑍍𑌰𑌃 - 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑍀 - 𑌅𑌹𑌂 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥𑌃 - 𑌅𑌹𑌂 𑌵𑌾𑌨𑌪𑍍𑌰𑌸𑍍𑌥𑌃 - 𑌅𑌹𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀 - 𑌅𑌹𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 - 𑌅𑌹𑌂 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀 𑌇𑌤𑍍𑌯𑌾𑌦𑍍𑌯𑌭𑌿𑌮𑌾𑌨𑍋 𑌜𑌾𑌯𑌤𑍇 - 𑌤𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌨𑌾𑌨𑍍𑌯𑍋 𑌹𑍇𑌤𑍁𑌃 - 𑌅𑌸𑍍𑌯𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌸𑍍𑌯 𑌅𑌵𑌿𑌵𑍇𑌕𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌶𑌰𑍀𑌰𑌮𑍇𑌵 𑌕𑌾𑌰𑌣𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯𑌸𑍍𑌯 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌯𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷 𑌇𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌾𑌰𑌿𑌣𑌃 𑌅𑌹𑌂 𑌗𑍃𑌹𑌸𑍍𑌥 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌮𑌾𑌨𑍋 𑌨𑌾𑌸𑍍𑌤𑌿 - 𑌸 𑌨 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍𑌛𑌰𑍀𑌰𑌮𑌵𑌲𑌮𑍍𑌬𑍍𑌯 𑌅𑌭𑌿𑌮𑌾𑌨𑍋 𑌨𑌾𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 - 𑌶𑌿𑌖𑌾𑌯𑌜𑍍𑌞𑍋𑌪𑌵𑍀𑌤𑌮𑌵𑌲𑌮𑍍𑌬𑍍𑌯 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣 𑌇𑌤𑌿 - 𑌕𑌾𑌷𑌾𑌯 𑌕𑌮𑌣𑍍𑌡𑌲𑍍𑌵𑌾𑌦𑌿𑌕𑌮𑌵𑌲𑌮𑍍𑌬𑍍𑌯 𑌅𑌹𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀𑌤𑌿 𑌚 𑌅𑌭𑌿𑌮𑌾𑌨𑍋 𑌨𑌾𑌗𑌚𑍍𑌛𑌤𑍀𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 - 𑌶𑌿𑌖𑌾𑌯𑌜𑍍𑌞𑍋𑌪𑌵𑍀𑌤𑌾𑌦𑌿 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯 𑌵𑍈𑌶𑍍𑌯𑌕𑍁𑌲𑍇𑌷𑍍𑌵𑌪𑌿 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 - 𑌕𑌾𑌷𑌾𑌯 𑌕𑌮𑌣𑍍𑌡𑌲𑍍𑌵𑌾𑌦𑌿 𑌕𑍇𑌷𑌾𑌂𑌚𑌿𑌚𑍍𑌛𑍂𑌦𑍍𑌰𑌾𑌣𑌾𑌂 𑌤𑌪𑌸𑍍𑌵𑌿𑌨𑌾𑌮𑌪𑍍𑌯𑌸𑍍𑌤𑌿 - 𑌏𑌤𑍇𑌷𑌾𑌮𑌪𑌿 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃 - 𑌅𑌹𑌂 𑌸𑌂𑌨𑍍𑌯𑌾𑌸𑍀𑌤𑍍𑌯𑌭𑌿𑌮𑌾𑌨𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 - 𑌤𑌨𑍍𑌨 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 𑌸𑍍𑌤𑍍𑌰𑍀𑌪𑍁𑌰𑍁𑌷𑌾𑌭𑌿𑌮𑌾𑌨𑌵𑌚𑍍𑌚 - 𑌅𑌵𑌯𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑌮𑌵𑌲𑌮𑍍𑌬𑍍𑌯 𑌅𑌹𑌂 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌮𑌾𑌨 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 - 𑌸𑌰𑍍𑌵𑍇𑌷𑌾𑌮𑌵𑌯𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑌾𑌭𑌾𑌵𑌾𑌚𑍍𑌚 - 𑌏𑌕𑌰𑍂𑌪𑌤𑍍𑌵𑌾𑌚𑍍𑌚 - 𑌅𑌵𑌯𑌵𑌵𑌿𑌶𑍇𑌷𑍋𑌽𑌪𑌿 𑌕𑌾𑌰𑌣𑌂 𑌨 𑌭𑌵𑌤𑌿 - 𑌤𑌰𑍍𑌹𑌿 𑌵𑌿𑌶𑌿𑌷𑍍𑌟𑌮𑌾𑌤𑌾𑌪𑌿𑌤𑍃𑌜𑌨𑍍𑌯𑌾𑌵𑌯𑌵 𑌵𑌿𑌶𑍇𑌷𑌮𑌵𑌲𑌮𑍍𑌬𑍍𑌯 𑌅𑌭𑌿𑌮𑌾𑌨𑌵𑌿𑌶𑍇𑌷 𑌇𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 - 𑌤𑌜𑍍𑌜𑌨𑍍𑌯𑌰𑍋𑌮 𑌨𑌖𑌦𑌨𑍍𑌤 𑌮𑍂𑌤𑍍𑌰𑌪𑍁𑌰𑍀𑌷𑌾𑌦𑍍𑌯𑌵𑌯𑌵𑌾𑌨𑌾𑌮𑌪𑌿 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌤𑍍𑌵𑌾𑌦𑌿 𑌵𑍍𑌯𑌵𑌹𑌾𑌰𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 - 𑌸 𑌨 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 - 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌵𑌿𑌵𑍇𑌕𑌂 𑌵𑌿𑌨𑌾 𑌅𑌨𑍍𑌯𑌤𑍍 𑌕𑌿𑌮𑌪𑍍𑌯𑌵𑌲𑌮𑍍𑌬𑍍𑌯 𑌅𑌭𑌿𑌮𑌾𑌨 𑌆𑌗𑌚𑍍𑌛𑌤𑍀𑌤𑌿 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌾𑌪𑌿 𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌨 𑌶𑌕𑍍𑌯𑌤𑍇 ॥



ஆனல் இந்த அபிமான மெப்படி வருகிறதென்ருலோ, அவிவேகத்தினல் வருகிறது. அதெப்படியெனில், சகலமான ஜீவர்களும் தாங்கள் தேகத்தைவிட அந்நியமானவர்களா யிருந்தாலும் விவேகமில்லாததி ஞலேயே நான் பிராம்மணன், நான் க்ஷத்திரியன், நான் வைசியன், நான் சூத்திரன், நான் பிரும்மசாரி, நான் கிரகஸ்தன், நான் வானப்பிரஸ்தன், நான் சந்நியாசி, நான் புருஷன், நான் ஸ்திரீ இவைமுதலிய அபிமான முண்டாயிருக்கிறது இதை (இந்த அவிவேகத்தை) த்தவிர (அபிமானத்திற்கு) வேறே ஏதுவில்லை.

இந்த அபிமானத்திற்கு அவிவேகம் காரணமல்ல. சரீரம் தான் காரணம் சரீரத்தை ஆசிரயித்து தான் அபிமான முண்டாகிறது என்ருலோ, க்ஷத்திரியனுக்குத்தான் பிராம்மணனென்றும் ஸ்திரீக்குத்தான் புருஷனென்றும் பிரும்மசாரிக்குத்தான் கிரஹஸ்தனென்றும் அபிமான முண்டாகவேண்டும். அப்படி காணப்படவில்லை யாகையால் சரீரத்தை யனுசரித்து அபிமான முண்டாகிறதில்லை. குடுமி பூணனூல் முதலியவைகளை அனுசரித்து நான் பிராம்மணனென்றும் காஷாயதண்ட கமண்டுலுவை யனுசரித்து நான் சந்நியாசி என்றும் அபிமான முண்டாகட்டுமே யென்ருல், சிகை பூணனூல் க்ஷத்திரிய வைசியகுலங்களிலு மிருக்கின்றன. காஷாயதண்ட கமண்டுலுக்கள் சில சூத்திர தபசிகளிடத்திலு மிருக்கின்றன. அவர்களுக்கும் நான் பிராம்மணன் நான் சந்நியாசி என்று அபிமான முண்டாகவேண்டும் அப்படி காணப்படவில்லை. ஸ்திரீ புருஷ அபிமானத்தைப்போல ஒரு அவயவ விசேஷத்தினல் நான் பிராம்மணனென்பது முதலிய அபிமான முண்டாகிறதோவென்ருல், சகலரும் ஒரே ரூபமாயிருப்பதினலே அவயவ விசேஷமும் காரணமல்ல. ஆனல் விசேஷ யோக்கியதை யுள்ளதாய் தகப்பனிடத்திலிருந் துண்டான அவயவங்கள் மூலமாய் அபிமான முண்டாகட்டுமே என்ருலோ, அப்படிப்பட்டவர்களிடத்தி லிருந்துண்டான மயிர் நகம் பல்லு மலமூர்த்திரம் முதலிய அவயவங்களுக்கும் பிராம்மணத்துவம் முதலிய வியவகார முண்டாகவேண்டும் அப்படிக் காணப்படவில்லை. ஆகையினலே அவிவேகத்தைத் தவிர வேறே எதையாவது அனுசரித்து அபிமான முண்டாகிறதென்று பிர்ம்மாகூட சொல்ல சக்தரல்ல.

ஆனல் பிராம்மணத்துவம் முதலான அபிமானம் எதினு லுண்டாகிறதென்ருல், நன்ருய் விசாரிக்கும்கால் உலகத்தில் உத்ஸவம் கல்லியாணம் சபை சேனை இப்படிப்பட்டதாகிய வஸ் துக்களுடைய் கூட்டங்களுக்கு அந்தந்தப் பெயரினுல் வியவகார முண்டாகிறது. அப்படி மாயாமயமாயும் வாக்கினுல் சொல்லத் தகாததாயு மிருக்கிற தேகேந்திரியாதிக் கூட்டங்களுக்கே உலக வியவகார மாத்திரத்தினுலேயே பிராம்மணன் க்ஷத்திரியன் வைசி யன் சூத்திரன் ஸ்திரீ புருஷன் நபும்ஸகன் குஜராத்தி மகாராஷ் டிரன் தெலுங்கன் கருநாடகன் திராவிடன் சாஸ்திரி தீக்ஷிதன் அவதானி பௌராணிகன் வேதாங்கங்களை பூர்த்தியா யறிந்தவன். சைவன் பாகவதன் சேவகன் பிரதானி இராஜன் மந்திரி குரு சிஷியன் முதலான சகல நாமவியவகாரங்களு முண்டாகின்றன. முக்காலத்திலும் ஆத்மாவுக்கு நாமரூப வியவகாரமில்லை இவ்வித சுவரூப விசார மில்லாததே அவிவேகம். இப்படிப்பட்ட அவி வேகத்தினுலேயே சகலமானவர்களுக்கும் ஆத்மாவிடத்தில் வரு ணுசிரமாதி அபிமான முண்டாகிறது. இந்த அவிவேக மெப்படி யுண்டாகிற தென்ருலோ, தன்னுடைய சிதாத்தும சுவரூபத்தை அநாதிகாலமாய் மறைத்ததும் ஆத்ம ஞானத்தினுலேயே நிவிருத் தியாகத் தக்கதுமாகிய அநாதி அக்ஞானமே காரணமாயிருக் கிறது. இந்த அக்ஞானத்தினுலேயே "என்னை நான் அறியவில்லை" என்று வியவகரிக்கப் படுகிறது. ஆனல் உலகத்தில் பிராந்தன்* தவிர மற்ற எவன்தான் தன்னை அறியவில்லை, என்ருலோ— சகலமானவர்களும் தன்னை யறியாத பிராந்தர்கள்தான். எப்படி யெனில்— நான் பிராம்மணன் நான் க்ஷத்திரியன் நான் வைசியன் நான் சூத்திரன் நான் பிர்ம்மசாரி நான் கிரகஸ்தன் இவை முத லிய ரூபங்களினுலே பொய்யாயிருக்கிற இந்தத் தேகத்தையே தானென்று சகலரும் அறிகிருர்கள். ஆத்மா சரீரத்தைவிட அந் நியனென்று ஒருவரும் அறிகிறதில்லை யாகையால் எல்லோரும் பிராந்தர்களே.

---

* நிலையன்றி சுத்திக்கொண்டு அல்லது திரிந்துகொண் டிருக்கிறவன் பிராந்தன். ஆனல் இந்தவிடத்தில் புத்தியை நிலையாய்நிறுத்த சக்தியற்று புத் தியை சுத்தவிட்டு கொண்டிருக்கிறவனுகிய பயித்தியக்காரன் என்பது தாத் பரியம்.

[illegible]



உலகத்தில் சாஸ்திரம் தெரிந்த சிலரும் பௌராணிகர்களும் தேகம் அநாத்துமா வென்பதை தெரிந்து கொண்டவர்களாய் குடம் சுவர் முதலியவைகளைப்போ லொத்த தேகத்தைக் காட்டிலும் ஆத்மா அந்நிய மானவனென்று தெரிந்திருக்கிறார்கள் அப்படியிருக்க யாரும் ஆத்மாவை அறியவில்லையென்று எப்படி சொல்லலாமெனில்—அப்படிப்பட்டவர்களும் வாஸ்தவமான ஆத்ம சுவரூபத்தை அறியவில்லை. ஆனால் அவர்களெப்படி அறிந்திருக்கிறார்களெனில் கருத்தா, போக்தா, தனித்தனியா யிருக்கிறவன், லோகாந்தரம் போகிறவன், சிதாபாஸரூபன், வியவகாரம் செய்கிறவன் இப்படிப் பட்டவனாகிய ஜீவாத்துமாவையே ஆத்மாவாக தெரிந்திருக்கிறார்கள். அவனையன்றி அகருத்தாவாயும் அபோக்தாவாயும்- தனித்தனியன்றி ஒன்றாய் அசலனாயும் சித் சுவரூபனாயுமிருக்கிற பாரமார்த்திகமான ஆத்மாவை யறிகிற தில்லை. இந்த அக்ஞானம் எப்படி வந்ததென்றால்—இதை அநாதி என்று வேத சாஸ்திரங்கள் சொல்லுகிறதினாலே இதற்குக் காரணம் சொல்வது அசாத்தியமானது. இந்த அக்ஞானத்திற்கு ஆதி யில்லையென்றால் அந்தமுமில்லை யென்பது நிச்சயமா யிருக்கவேண்டுமல்லாவா. அப்படியானால் ஜீவனுக்கு முக்தியே யில்லையென்றாகிறதெனில் அப்படியல்ல. அக்ஞானத்திற்கு ஆதியில்லா விட்டாலும் அந்தமுண்டு. உலகத்தில் சில பாதார்த்த (வஸ்து) ங்களுக்கு ஆதி யில்லா விட்டாலும் அந்தமுண்டு. சிலவற்றிற்கு அந்தமில்லா விட்டாலும் ஆதியுண்டு. அதெப்படியெனில், பிராகபாவ *த்திற்கு ஆதியில்லை அந்தமுண்டு. பிரத்துவம்ஸாபாவ †த்திற்கு ஆதி யுண்டு அந்தமில்லை.

---

* † தர்கசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிற பலவித அபாவங்களில் இந்த பிராகபாவமும் பிரத்துவம்ஸா பாவமும் சேர்ந்தன. குடமுண்டாகிறதற்கு முன் குடமில்லை யென்கிறதாகிய அபாவம் வெகுகாலமா யிருக்கிறது. குடமில்லையென்கிற அபாவவாக்கியம் எப்போ துண்டாச்சுதென்பது தெரியா விட்டாலும் குடமுண்டான உடனே ஆதியில்லை என்கிற அபாவ வாக்கியத்திற்கு அந்தமுண்டாய்விட்டது. இதுதான் பிராகபாவம். நசிக்கச் செய்வதினால் இல்லாமை யுண்டாகிறது. எப்படி என்றால் குடம் உடைக்கப்பட்டவுடன் குடமில்லாமை யுண்டாகிறது. உண்டான அந்த இல்லாமைக்கு அந்தமில்லை ஆகையால் இதுதான் பிரத்துவம்ஸாபாவம்.

𑌕𑌿𑌞𑍍𑌚 𑌵𑌾𑌤𑌪𑌿𑌤𑍍𑌤𑌶𑍍𑌲𑍇𑌷𑍍𑌮𑌜𑌨𑍍𑌯𑌵𑍍𑌯𑌾𑌧𑍇𑌃 𑌕𑌾𑌰𑌣𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌽𑌪𑌿 𑌵𑍈𑌦𑍍𑌯𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑍌𑌷𑌧𑍈𑌃 𑌯𑌥𑌾 𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌿𑌰𑍍𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇 - 𑌤𑌥𑌾 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌕𑌾𑌰𑌣𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌽𑌪𑌿 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌾𑌕𑍍𑌯𑌜𑌨𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌨𑌾𑌶𑍋 𑌭𑌵𑌤𑌿 - 𑌇𑌤𑌿 𑌸𑌿𑌦𑍍𑌧𑌾𑌨𑍍𑌤𑌃 - 𑌅𑌸𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌲𑌕𑍍𑌷𑌣𑌂 𑌕𑌿𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 - 𑌤𑌦𑍍𑌵𑌕𑍍𑌤𑍁𑌂 𑌨 - 𑌤𑌥𑌾𑌹𑌿 - 𑌤𑌦𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌨𑌸𑌤𑍍 - 𑌨𑌾𑌸𑌤𑍍 - 𑌨𑌾𑌪𑌿𑌸𑌦𑌸𑌤𑍍 - 𑌨𑌸𑌾𑌵𑌯𑌵𑌂 - 𑌨𑌨𑌿𑌰𑌵𑌯𑌵𑌂- 𑌨𑍋𑌭𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌂- 𑌨𑌭𑌿𑌨𑍍𑌨𑌂- 𑌨𑌾𑌭𑌿𑌨𑍍𑌨𑌂 - 𑌨𑌾𑌪𑌿𑌭𑌿𑌨𑍍𑌨𑌾𑌭𑌿𑌨𑍍𑌨𑌂- 𑌕𑌿𑌨𑍍𑌤𑍍𑌵𑌨𑌿𑌰𑍍𑌵𑌚𑌨𑍀𑌯𑌂- 𑌤𑌸𑍍𑌯 𑌕𑌥𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 - 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑍇𑌨 𑌬𑌾𑌧𑍍𑌯𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 - 𑌨𑌸𑌤𑍍 𑌶𑌶𑌵𑌿𑌷𑌾𑌣 𑌨𑌰𑌵𑌿𑌷𑌾𑌣𑌸𑌮𑌂 𑌨𑌾𑌸𑌤𑍍 𑌅𑌹𑌮𑌜𑍍𑌞 𑌇𑌤𑌿 𑌸𑌰𑍍𑌵𑍈𑌰𑌨𑍁𑌭𑍂𑌯𑌮𑌾𑌨𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 - 𑌨𑌾𑌪𑌿𑌸𑌦𑌸𑌤𑍍 - 𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 - 𑌸𑍍𑌥𑍂𑌲𑌾𑌕𑌾𑌶𑌃 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌃 - 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌿 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌃 𑌅𑌪𑌞𑍍𑌚𑍀𑌕𑍃𑌤 𑌆𑌕𑌾𑌶𑌃 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌿 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌾𑌃 𑌗𑍁𑌣𑌾𑌃 - 𑌤𑍇𑌭𑍍𑌯𑍋𑌽𑌪𑌿 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌮𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌪𑌿 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌸𑍍𑌯𑌾𑌪𑌿 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌮𑍂𑌲𑌕𑌾𑌰𑌣𑌤𑍍𑌵𑌾𑌤𑍍- 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌨𑌸𑌾𑌵𑌯𑌵𑌂- 𑌸𑍍𑌥𑍂𑌲𑌪𑌦𑌾𑌰𑍍𑌥𑌰𑍂𑌪𑌜𑌗𑌦𑌾𑌕𑌾𑌰𑍇𑌣𑌪𑌰𑌿𑌣𑌾𑌮𑌾𑌤𑍍 𑌨 𑌨𑌿𑌰𑌵𑌯𑌵𑌂 - 𑌅𑌨𑍍𑌯𑍋𑌨𑍍𑌯𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌨𑍍𑌨𑍋𑌭𑌯𑌾𑌤𑍍𑌮𑌕𑌂 - 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌭𑌿𑌨𑍍𑌨𑌮𑌿𑌤𑌿𑌚𑍇𑌤𑍍 𑌅𑌦𑍍𑌵𑍈𑌤𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌤𑍍 - 𑌆𑌤𑍍𑌮𑌸𑌤𑍍𑌤𑌾𑌤𑌿𑌰𑌿𑌕𑍍𑌤𑌸𑌤𑍍𑌤𑌾𑌭𑌾𑌵𑌾𑌚𑍍𑌚 - 𑌨𑌭𑌿𑌨𑍍𑌨𑌂 - 𑌅𑌭𑌿𑌨𑍍𑌨𑌮𑌿𑌤𑌿 𑌚𑍇𑌤𑍍 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 𑌶𑌕𑍍𑌤𑌿𑌹𑍀𑌨𑌤𑍍𑌵𑌪𑍍𑌰𑌸𑌙𑍍𑌗𑌾𑌤𑍍 - "𑌪𑌰𑌾𑌸𑍍𑌯𑌶𑌕𑍍𑌤𑌿𑌰𑍍𑌵𑌿𑌵𑌿𑌧𑍈𑌵 𑌶𑍍𑌰𑍂𑌯𑌤𑍇" 𑌇𑌤𑌿 𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌵𑌿𑌰𑍋𑌧𑌾𑌚𑍍𑌚॥



மேலும் வாத பித்த சிலேஷ்மத்தினு லுண்டான வியாதிக்குக் காரணமெதுவென்று தெரியாவிட்டாலும் வைத்தியசாஸ்திரத்தில் சொல்லப்பட்டமருந்துகளினுல் எப்படி பரிகாரம் காணப்படுகிறதோ அப்படி அக்ஞானத்திற்கு மூல மின்னதென்று தெரியாவிட்டாலும் வேதாந்த சாஸ்திர வாக்கியத்தினுலுண்டாகிற ஞானத்தினுல் அக்ஞானம் நாசமாகிறதென்பது சித்தாந்தம். அக்ஞானத்தின் சுவரூபலக்ஷணம் எப்படியெனில், அதைச் சொல்வது அசாத்தியம். ஏனென்றுல்—அந்த அக்ஞானம் சத்துமல்ல. அசத்துமல்ல. சதசத்துமல்ல. அவயவமுள்ளதுமல்ல அவயவமில்லாததுமல்ல. அவ்விரண்டு சேர்ந்ததுமல்ல. வேருனதுமல்ல. வேறல்லாததுமல்ல. அவ்விரண்டுமல்ல. பின்னெதுவெனில், அநிர்வாச்சியமே (வாக்கினுல் சொல்லத்தகுந்ததல்லாதது). ஏன் சத்து முதலியவை அல்லவென்றுல், தத்துவஞானத்தினுல் பாதிக்கப்படுகிறதினுலே சத்தல்ல. முயல்கொம்பு மனிதக்கொம்பு ஆகாசத்தாமரை இவைபோல அசத்துமல்ல. ஏனென்றுல்—"நான் அக்ஞானி" என்று சகலராலும் அனுபவிக்கப்படுகிறதினுலேதான். ஒன்றுக்கொன்று விரோத சுவரூபமானதினுல் சதசத்துமல்ல (சத்தும் அசத்தும் ஒன்றுக்கொன்று விரோத சுவபாவ மெப்படியென்றுல், வெளிச்சமும் இருளும்போல ஒன்றிருந்தால் மற்றென்றிருக்கமாட்டாது). ஸ்தூல ஆகாசமே சூக்ஷ்மமானது. அதைக் காட்டிலும் சூக்ஷ்மம் (தன்மாத்திரை என்கிற) அபஞ்சீகிருத ஆகாசம். அதைக்காட்டிலும் சூக்ஷ்மமானவை (சத்துவாதி) குணங்கள். அவைகளைக்காட்டிலும் சூக்ஷ்மமானது அக்ஞானம். ஆகையினுலே அக்ஞானமானது இவ்வித சூக்ஷ்மத்திற்கெல்லாம் மூலகாரணமா யிருப்பதினுலே அவயவமுள்ளதல்ல. அதுவே ஸ்தூல பதார்த்தமாகிய ஜகதாகாரமாய் பரிணமிக்கிறதினுலே அவயவமில்லாததுமல்ல. ஒன்றுக்கொன்று விரோதமானதால் உபயாத்மகமுமல்ல. ஆத்மாவைக் காட்டிலும் (அக்ஞானமானது) அந்நியமானதென்றுல், அத்துவைத சுருதிகளுக்கு விரோதமானபடியினுலேயும் ஆத்மசத்தைத்தவிர வேறே சத்தில்லாததினுலேயும் அந்நியமானதல்ல. அந்நியமல்லவென்றுல், ஆத்மாவுக்குச் சக்தியில்லையென்று சொன்னதாக வாகும். பின்னும் "இவருடைய சிரேஷ்டமான சக்தியானது அநேகவிதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது" என்கிற சுருதிக்கும் விரோதமாகும்.

